

தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. ஆனந்த ராவ் முதலியார் அவர்கள் ஜனாதிபதி அவர்களை மாலையிட்டு வரவேற்கின்றார்.

அண்மையில்
இந்திய ஜனாதிபதி
டாக்டர். என். சஞ்சீவி ரெட்டி
அவர்கள் தம் துணைவி
யாருடன் திருமலைக்கு
வருகை தந்திருந்தார்.

ஜனாதிபதி அவர்கள் துணைவியாருடன் விமான வேங்கடேஸ்வரரைத் தரிசிக்கின்றார்.



திருமலையில் அர்ச்சகரிடமிருந்து ஜனாதிபதி அவர்கள் பிரஸாதம் பெறுகின்றார்.



ஆந்திர மாநில ஆளுநர் திருமதி. சாரதா முகர்ஜி, முதல்வர் டாக்டர். எம். சென்னாரெட்டி, அறநிலையத்துறை ஆணையர் திரு. கே. புருஷோத்தம நாயுடு, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் டாக்டர். சி. அண்ணாராவ் மற்றும் குழு உறுப்பினர்களுடன் ஜனாதிபதி அவர்கள்.





அதிவேங்கட சைலமுதாரமதே:
ஜநதாபிமதாதி கதாநரதாத்।
பரதேவதயா கதிதாந் நிகமை:
கமலாதயிதாந்ந பரம் கலயே ‖

[ நீ வரையாதருளும் வள்ளல் ஆனமையின் அடியார் கோரும் பயன்களையும், அவர் கோரா விடினும் அவர்களுக்கு நன்மையான வேறு பயன்களையும் அதிகமாக அளிக்கின்றாய். ஐயம் திரிபுகளுக்கு இடமின்றி உபநிஷத்துக்கள் எல்லாம் நீயே பரம்பொருள் என்று அறுதியிடுகின்றன. எல்லாரினும் உயர்ந்த திருமகளும் உன்னையே தன் அன்பனாக வரித்தாள். ஆதலின் உன்னிலும் உயர்ந்தவன் ஒருவன் இருக்க முடியாது என்ற உண்மையை அடியேன் உறுதியாய் நம்புகிறேன்.]

(ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸுப்ரபாதம்—ஸ்தோத்ரம்—வாதிபீகர மகாகுரு.)




# ஸப்தகிரி



மலர்: 9 அக்டோபர் 1978 இதழ் 5

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. ஆனந்தராவ் முதலியார்,
B.SC., LL.B.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை


| | பக்கம் |
|---|---|
| ஆசிரியர் உரை ... | 3 |
| பொறுப்பாண்மைக்குழு முடிவுகள் ... | 4 |
| திருமலை அமைப்பும்-சிறப்பும் ... | 5 |
| கம்பராயணத்திலே திருப்பதி மகாத்மியம் ... | 9 |
| ஸ்ரீராமானுஜ ஸித்தாந்தமும் திருவேங்கடமுடையானும் ... | 13 |
| திருமலை பிரம்மோற்சவம் ... | 17 |
| திருவேங்கடம் ... | 25 |
| ஓடி வா! ... | 27 |
| தில்லையில் நந்தனாரும் குலசேகரரும் ... | 33 |
| ஸ்ரீ த்யாகராஜ ஸுப்ரபாதம் ... | 34 |
| வா! வா! வெங்கடேசா! ... | 35 |
| செய்திச் சுருக்கம் ... | 37 |
| ராசி பலன் ... | 39 |


அட்டைப் படம்: இறைவனின் மோகினி அவதாரம்-திருமலை பிரம்மோற்சவம்.

ஸப்தகிரி வாசகர்களுக்கு எங்கள் உளங்கனிந்த தீபாவளி நல் வாழ்த்துக்கள்.

(இம்மாத இதழ் பிரம்மோற்சவ சிறப்பு இதழாக வெளிவருவதால், இவ் இதழில் தொடர் கட்டுரைகளை வெளியிடவில்லை. ஆ-ர்.)

# ஆசிரியர் உரை

''கடவுள் இல்லை, இல்லை. கோயில்களை இடித்துத் தள்ளுங்கள்'' என்ற நாத்திகவாதிகளின் கூக்குரல் அவ்வப்போது பகுத்தறிவாளர்களின் பாசறையிலிருந்து ஒலித்துக் கொண்டுதான் இருக்கிறது. அதுவும் ''மனித உள்ளமே இறைவன் உறையும் ஆலயம்'' என்ற உயர்ந்த தத்துவம் கூறும் இந்து சமயம் தோன்றிய புனித பாரதத்தில் பிறந்து வளர்ந்த அன்பர்கள் அக்கூக்குரலை எழுப்புவது வியப்பிற்குரிய வேதனையாகும். ஆனால் இக்குரல் இந்து சமயத்திற்குப் புதியது அன்று. உலகம் தோன்றிய அன்றே, பரமன் இப்பூவுலகில் நடமாடிய போதே ஒலித்ததுதான். ஆம்! இரணிய கசிபுவைவிட மற்றொரு நாத்திகனை இந்து சமயம் கண்டதில்லை, இனி காணவும் முடியாது. ஆனால் அதே சமயத்து பிரகலாதனைப் போன்று உண்மையான, தீவிர நம்பிக்கைக் கொண்ட பக்தனை இன்று நாம் காண்பது அரிது என்பதும் வெளிப்படையான உண்மை. ஆனால் கடவுள் இல்லை என்பவன் துன்பம் அல்லது ஆபத்து வருங்காலத்து இறைவனை மானசிகமாக வேண்டுவதும், கடவுள் இருக்கிறான் என்பவன் மகிழ்ச்சியில் திளைக்கும் போது ''கோயில்களில் நடைபெறும் உற்சவங்கள் எனப்படும் திருவிழாக்கள் யாவுமே வீண் என்று கூறும் பகுத்தறிவாளர்களின் கூற்று உண்மைதான்'' என்று முணுமுணுப்பதும் வாழ்க்கையில் சாதாரணமாக நடப்பவைதான். வீண் எனக் கூறப்படும் ஆண்டு தோறும் கொண்டாடப் பெறும் சமய விழாக்கள் யாவும் சமூக நலனுக்காகவே நடைபெறுகின்றன.

மனிதன் தானே பல பிரச்னைகளை உண்டாக்கிக் கொண்டு இறுதியில் அவற்றால் சூழப்பட்டு உள்ளத்தாலும் உடலாலும் 'உற்சாகம் குன்றி' வாழத்துவங்கி, தன் இறுதி நாட்களைத் எண்ணத் தொடங்கிவிடுகின்றான். மேலும் பிரச்னைகளிலிருந்தும் முரண்பாடு கொண்டு அவற்றினால் நாள் தோறும் அல்லலுறும் மனிதன், அன்றாட நிகழ்ச்சிகளிலிருந்து ஒரு மாற்றத்தை எதிர்பார்க்கின்றான். அம்மாற்றம் அவனுக்கு மன மகிழ்ச்சியையும், மனஅமைதியையும் வழங்குமாயின் அதனையே அவ்வப்போது விரும்புகின்றான்; நாடுகின்றான்: அதனைத்தான் பொழுதுபோக்கு என்று கூறுகின்றோம். வறியவனுக்கும் வாரி வழங்குபவனுக்கும் இப்பொழுதுபோக்கு ஒரு தேவையாக அமைந்திருக்கின்றது. ஆனால் வாழ்க்கை எனும் சமன் கோல் ஜாதி, இனம், நிறம் எனும் எடைக்கற்களைக் கொண்டுதான் சமுதாயத்தில் இயங்கி வரும் ஏற்றத் தாழ்வுகளைச் சுட்டிக் காண்பிக்கின்றது. ஆகவேதான் இருவருக்கும் பிடித்தமான பொழுதுபோக்குகள் ஒருங்கே அமைவது கடினமாக உள்ளது. இவ் இடைவெளியை நிறைக்க, 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' எனும் உணர்வு தழைத் தோங்கிட, மனஅமைதியையும், மகிழ்ச்சியையும் காலமெல்லாம் பெற்றிட சமய விழாக்கள் வழி வகுக்கின்றன. உலக நாகரிக வாழ்க்கைக்கு முதன் முதலாக வழிகாட்டியாக விளங்கிய சிந்து சமவெளி நாகரிகம் தோன்றிய பாரதத்தின் ஆன்மீக வாழ்க்கையின் அவசியத்தை சமய விழாக்கள் எடுத்துக் கூறுகின்றன. மனிதன் தான் எங்கெங்கு இருக்கின்றானோ, அங்கெல்லாம் தன்னைப் படைத்த இறைவனும் இருக்கின்றான், இருக்க வேண்டும் என்றே விரும்புகின்றான். தன்னால் ஒரு சிறு புல்லைக்கூட உற்பத்திப் பண்ண முடியாது என்பதை அறிந்து தன்னையும் இப்பூவுலகினையும் படைத்துக்காத்து நிற்கும் அப்பரம்பொருளின் பெருங் கருணை உள்ளத்தை எண்ணி மகிழ்ந்து, நன்றி கூறும் முகத்தான், அவனுக்கு விழா எடுத்து மகிழ்கின்றான். சமூக, சுகாதார கூறுபாடுகளைக் கொண்டு விளங்கும் இவ்விழாக்கள் இந்துக்களின் ஆத்மீகப் பண்பு நிறைந்த அற வாழ்க்கைக்கு அடி கோலுகின்றன.

வீட்டில் நடைபெறும் விழாக்களின் போது, தான், தனது என்ற ஒரு சிறு வட்டத்திற்குள்ளேயே மனிதனது மகிழ்ச்சி, அமைதி அடங்கி விடுவதற்கு வாய்ப்பு அதிகமாக உள்ளது. ஆனால் அவனுள் ஒரு பரந்த மனப்பான்மையை தோற்றுவிக்க, தியாகம், தொண்டு போன்ற சமுதாயம் செம்மைபெறும் உயிர்ப்பண்புகள் மேலோங்கிட, எல்லாவற்றிற்கும் மேலாக மனிதனுள் உறையும் இறைமை உணர்வு தழைத்தோங்கிட பொது இடத்தில் அதாவது கோயில்களில் நடைபெறும் திருவிழாக்கள் துணைபுரிகின்றன. ஒரு சிலையை ஒரு சிறு இருட்டறையில் வைத்து வழிபடுதற்கன்று விண்முட்டும் கோபுரங்கள் கொண்ட கோயில்களைக் கட்டியது. கற்றவர்–கல்லாதவர், இருப்பவர்-இல்லாதவர், உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்ற வேறுபாடு இன்றி-வேறுபாடு மறந்து-எல்லோரும் சேர்ந்து உள்ளம் மகிழ்ந்திடும் வகையில் ஒரு பொது பொழுது போக்காக கோயில்களில் சமய விழாக்கள் நடைபெறுகின்றன. இவ்வாறு உன்னதக் கருத்துக்களுடன் குறிப்பிட்ட நாட்களிலோ, மாதங்களிலோ, சூழ்நிலைகளிலோ நடத்தப்படும் சமய விழாக்களில் மிகச் சிறப்புடன் ஆண்டுக்கொரு முறை கொண்டாடப் பெறும் பிரம்மோற்சவம், பல்வேறு சூழ்நிலைகளில் பலமுறை பலர் கண்டுகளிக்கும் வகையில் வசதிக் கேற்றவாறு பல்வேறு இடங்களில் நடத்தப்படுகின்றது. அதிலும் நெடியோன நிற்கும் திருமலையில் நடைபெறும் பிரம்மோற்சவத்திற்குப் புராணச் சிறப்பும், இலக்கியச் சிறப்பும் சால உண்டு. பிரம்மதேவனால் ஆரம்பிக்கப்பட்டு, மன்னர்கள் காலத்து வருடத்தில் பலமுறை கொண்டாடப்பட்டு, இன்று ஆண்டுக்கொரு முறை நடைபெறும் பிரம்மோற்சவத்தைக் காண கண் கோடி போதாது. ஒரு சேர ஒன்பது நாட்கள் நடைபெறும் இவ்விழாவின் போது திருமலை பூலோகத்தில் வைகுந்தமாகத் திகழும். கோயில் அரங்கத்திற்குள் எழுப்பப்படும் ஹோம குண்டங்களிலிருந்து மேலெழும்பும் நறுமணக் கமழ் புகை திருமலையில் ஓர் ஆன்மீகச் சூழ்நிலையை ஏற்படுத்தவும்; பல்வேறு வண்ண ஆடைகளாலும், அரிய அணிகலன்களாலும் அலங்காரம் செய்யப்பட்ட உற்சவமூர்த்தியின் எழிற்கோலங்கள் கண்களுக்கு விருந்தளிக்கவும்; காலையிலும் மாலையிலும நடைபெறும் பஜனைகளும், சமயச் சொற்பொழிவுகளும் கருத்திற்கும் காதிற்கும் உணவூட்டவும்; கோயில் பிரஸாதங்கள் நாவிற்கு விருந்தளிக்கவும் இவ்வாறு பல சுவை பலருக்கும் வேற்றுமையின்றி வாரி வழங்கும் இப்பிரம்மோற்சவத்தைத தவிர இப்பூவுலகில் வேறு ஒரு சிறந்த பொழுதுபோக்கு உண்டோ?

ஆகவே நம்முடைய பிரச்னைகளையும் துன்பங்களையும் சற்றே மறந்து, ஆன்மீகச் சூழ்நிலையில் தோய்ந்து பக்திப் பரவசத்தில் திளைத்து, நம்மை நாமே தூய்மைப்படுத்திக் கொள்ளும் வகையில் கலியுகக் கடவுளான வேங்கட நாதனைக் கண்ணாரக்கண்டு, நெஞ்சார உருக, திருமலையில் இம்மாத முதல வாரத்தில் தொடங்கவிருக்கும் பிரம்மோற்சவத்தில் பங்கேற்று, இறையருளுக்குப் பாத்திரமாவோமாக!

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

(17-8-78 அன்று திருமலையில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:)

*திருப்பதிக்கு அருகே ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரர் எழுந்தருளியுள்ள மங்காபுரத்திலிருந்து சந்திரகிரி இரயில்வே நிலையம் வரையிலும், சந்திர கிரியிலிருந்து மிட்ட பாளையம் வரையிலும், நரசிங்காபுரத்திலிருந்து சந்திர கிரி மிட்டபாளையம் வரையிலும் உள்ள சாலைகளில் குழல் விளக்குகளைப் பொருத்த குழு ரூ, 14,135 ஒதுக்கியுள்ளது.*

*தி. தி. தேவஸ்தான கட்டடங்களுக்காக இரும்பு வகைகளை வாங்குதற்கு தி. தி. தேவஸ்தான பொதுப்பணித் துறைக்கு ரூ. 9. 80 இட்சம் ஒதுக்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.*

*சந்திரகிரி அருகில் ஸ்ரீவாரிமெட்டு சாலையில் மேம்பாலம் ஒன்றினைக் கட்டுதற்கு குழு ரூ. 1,10,000 ஒதுக்கியுள்ளது.*

*திருமலையில் ஜி. என். சி. ஏரியாவில் 20 புதிய குடில்களைக் கட்டுதற்கு குழு 1,30,000 ஒதுக்கியுள்ளது.*

*திருப்பதி அருகே உள்ள கல்யாணி நீர்த் தேக்கத்திலிருந்து தி.தி. தேவஸ்தான நிறுவனங்களுக்கு நீர் வழங்கிடும் வகையில் குழாய்களை அமைத்திட குழு ரூ. 20,30 இலட்சம் ஒதுக்கியுள்ளது.*

*திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயிலில் சம்பங்கி பிராகாரத்தில் மற்றுமொரு திருமண மண்டபம் ஒன்றினைக் கட்டுதற்குக் குழு ரூ. 5 இலட்சம் வழங்குவதென்று தீர்மானித்துள்ளது.*

*திருமலையில் ஜி. என். சி. காட்டேஜின் முதல் தளத்திலுள்ள 20 குடில்களுக்கு மேஜை கட்டில் போன்ற சாமான்களை வாங்குதற்கு குழு ரூ. 1,40,000 ஒதுக்கியுள்ளது.*

*குண்டூர் மாவட்டத்தில் பல இடங்களில் பஜனை மந்திரங்களைக் கட்டுவதற்கு குழு ரூ.80,000 ஒதுக்கியுள்ளது.*

*பாண்டிச்சேரியில் திருநல்லாறிலுள்ள தர்பராணீஸ்வரசுவாமி கோயிலுக்கான காக்கை வாகனம் ஒன்றிற்காக மேற்படி கோயிலுக்கு தி. தி. தேவஸ்தானம் தன்னிடமிருந்து 2 கிலோ எடையுள்ள தங்க நகைகளை நிலவர விலைக்கு விற்க குழு அனுமதி அளித்துள்ளது.*

*திருப்பதியிலிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இல்லத்திலும், ஸ்ரீ வேங்கடேஸ்வரா பார்வை யிழந்தோர் மற்றும் காதுகேளாதோர் பள்ளியிலும் மாணவர்களுக்கு வழங்கப்படும் ராகிமால்ட்டுக்கான வெல்லத்தின் எடையை 0.10 கிராமிலிருந்து 0.15 கிராமாகவும் (மாணவர் ஒருவருக்கு), பாலின் அளவினை 100 மில்லி கிராமிலிருந்து 200 மில்லி கிராமாகவும் (மாணவர் ஒருவருக்கு) உயர்த்த குழு அனுமதி அளித்துள்ளது.*

*திருமலைக் கோயிலிலுள்ள உண்டியிலில் 31-8-78 வரை சேர்ந்த கைக்கடிகாரங்கள், துணி வகைகள் போன்ற தி. தி. தேவஸ்தானத்திற்குப் பயன் படாத பல வகையான பொருட்களைப் பொது மக்கள் ஏலத்தில் விற்று விடுவதற்கு குழு அனுமதி அளித்துள்ளது. ஏலம் விடும் தேதி தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவரால் பின்னர் முடிவு செய்யப்படும்.*

*மகாராஷ்ரா மாநிலத்தில் கொல்ஹாபூரிலுள்ள ஸ்ரீ மகாலக்ஷ்மி கோயிலுக்கு தஸரா பரிசாக தேவஸ்தானத்தின் சார்பாக ஒரு பட்டுப் பீதாம்பரத்தை அனுப்புவதென்று குழு தீர்மானித்துள்ளது.*

*ரிஷிகேசத்திலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் இலவச அறைகளுக்கான நாள் ஒன்றிற்கு வசூலிக்கப்படும் வாடகைத்தொகையினை ரூ. 2 லிருந்து ரூ. 3 ஆக உயர்த்த குழு முடிவு செய்துள்ளது.*

*திருமலையை மேலும் விரிவுப்படுத்தும் நோக்கத்தில் திருமலையில் ஹதிராம்ஜி மடத்தாருக்குச் சொந்தமான ராமலிங்க தோட்டம் எனும் நிலப் பரப்பினை ரூ. 2,34,159.58-ஐ நஷ்டஈடாகக் கொடுத்து வாங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.*

*தென்னிந்தியக் கலாசாரத்தின் பெருமையைப் பரப்பும் வகையில், ஜம்மு காஷ்மீரில் தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபத்துடன் கூடிய பஜனை மந்திரம் ஒன்றினையும், தகவலறிவிப்பு நிலையம் ஒன்றினையும் அமைப்பதென்று குழு தீர்மானித்துள்ளது.*

*திருப்பதியிலுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா ராம் நாராயண் ரூயா மருத்துவ மனையில் ''ஸ்ரீ வேங்கடேஸ்வரா புற நோயாளர்ப் பகுதி'' எனும் புதிய தோர் கட்டடம் ஒன்றினைக் கட்டுவதற்கு, ஆந்திரமாநில அரசு தன் பங்காக ரூ. 10 இலட்சம் வழங்குவதாக இருப்பின், தன் பங்காக தி.தி. தேவஸ்தானமும் ரூ. 10 இலட்சம் வழங்குதற்குக் குழு அனுமதி அளித்துள்ளது.*

*நெல்லூரைச் சார்ந்த திரு. மரப்பூர் கொத்தாராம ரெட்டி எழுதிய கம்பராமாயண நூலின் 150 பிரதிகளை வாங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.*

*கேரளமாநிலத்தில் குருவாயூரில் தி. தி. தேவஸ்தானத்தாரின் தகவலறிவிப்பு நிலையம் ஒன்றினைத் திறப்பதென்று குழு தீர்மானித்துள்ளது.*

*திருப்பதியிலுள்ள ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயிலுக்கும், ரிஷிகேசத்தில் ஸ்ரீ சந்திரமௌளீஸ்வரர் கோயிலுக்கும் தேவாரம் ஓதுபவர் இருவரை நியமிப்பதற்குக் குழு அனுமதி அளித்துள்ளது.*





# திருமலை அமைப்பும்-சிறப்பும்

திரு. R. பத்மநாபன், B.A.B.T.,
வேலூர் - 12.

கலியுகத்தில் அன்று தொட்டு இன்று வரை பக்தர்களும், மற்றவர்களும் லட்சக் கணக்கில் வந்துவிட்டுப் போவது தென்னாட்டின் தனிப்பெருஞ் செல்வமாகிய திருவேங்கடம் அல்லது திருமலை என்ற திவ்ய திருக்கோயிலுக்குத்தான். அஃது சென்னைக்கு வட மேற்கில் 90 கல் தூரத்திலிருக்கும் திருப்பதி என்னும் பட்டணத்திற்கு அருகாமையில் அமைந்துள்ளது. திருப்பதியிலிருந்து மலை ஏற ஆரம்பித்து மலை மீது ஏழு மைல் கடந்தால் திருவேங்கடவன் திருக்கோயிலையடையலாம். திருக்கோயிலைச் சுற்றியுள்ள சிறிய ஊரைத் திருமலை என்றும் மேல் திருப்பதி என்றும் சொல்வது வழக்கம். சங்கிலி கோத்தாற்போல் மலைகள் பாம்புபோல் வளைந்து வளைந்து செல்வதால் மொத்தமாக ஏழுமலைகளுக்கும் சேர்ந்து சேஷாசலம் என்ற பெயரும் வழங்குகிறது. வேங்கடேசப் பெருமான் இக்கலியுகத்தில் இந்துக்கள் அனைவராலும் பிரத்தியட்ச தெய்வமாகப் போற்றப்படுகிறான். எப்பொழுது பார்த்தாலும் யாத்ரிகர்களின் கூட்டமும் நெரிசலும் அதிகமாக இருக்கும் என்பது உலக மறிந்தது. ஒரு முறை திருமலைக்குத் தரிசனம் செய்யவந்த பக்தர் பெரும் ஆசைதீர தரிசனம் செய்துவிட்டு வீடு திரும்பியது கிடையாது. அடிக்கடி வந்து தரிசனம் செய்யவே விரும்புவார்.

## திருக்கோயில் தோன்றிய வரலாறு

திருமலை திருப்பதி மகாவிஷ்ணு வராகவதாரமெடுத்துப் புனிதமாக்கிய வராகக்ஷேத்திரத்தில் அமைந்துள்ளது என்று புராண வரலாறு கூறுகிறது. பகவான் மகாவிஷ்ணுவே மேற்சொன்ன இடத்தைத் தேடி பெரிய திருவடிகளினால் கொண்டுவரப்பெற்ற ஆனந்த விமானத்திலிருந்துவந்து மலையில் சுவாமி புஷ்கரிணியின் தென் கரையில்வந்துதங்கியிருந்தார் என்றும் கூறுவர். சிறிது காலத்திற்குப் பிறகு பகவான் அர்ச்சாவதாரத்தில் ஸ்ரீநிவாசன் என்ற திருநாமத்துடன் சேவை சாதித்துக் கொண்டும், ஆதிவராக க்ஷேத்திரமான சேஷாசலத்தில் புற்றினுள் வசித்துக் கொண்டும் இருந்தார்.

திருமலை திருக்கோயிலைப்பற்றி பதினெட்டுப் புராணங்களில் எட்டுக்குக் குறையாமல் புகழ்படக் கூறுகின்றன. அவற்றுள் வராக புராணமும், பவிஷ்யோத்ர புராணமும் குறிப்பிடத் தக்கவை.

திருமலை தெய்வீகத் திருக்கோயில் புராணச் சிறப்பும், தொன்மையும் ஒருங்கே பெற்று விளங்குவதைப்போல் இலக்கியச் சிறப்பும் பெற்றிருப்பதைக் காண்கிறோம். புராண காலத்

துக்குச் சற்றேறக் குறைய தமிழ்நாட்டில் இயற்றப் பெற்ற தமிழ் மொழியின் ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றாகிய சிலப்பதிகாரம் திருவேங்கடத்தை, 'வீங்கு நீரருவி வேங்கடம் ...போலம் பூவாடையிற் பொலிந்து தோன்றிய செங்கணெடியோன் நின்ற வண்ணமும்'' என்று விளக்கிக் கூறுவதைக் காணலாம். ஓரிரு ஆழ்வார்கள் நீங்கலாக மற்றவர்கள் திருவேங்கடத்தைப் பாடியிருக்கிறார்கள். அப்பாசுரங்களைப்பற்றி விரிக்கப்பெருகும்.

பண்டைக் காலத்துக் கல்வெட்டுகளாலும், தமிழ்ப் பழம்பெரு நூல்களாலும் திருமலை, திருவேங்கடம் என்று பல பெயர்களால் புகழப்படுவதைப் போல் மகான்கள் பலராலும் திருமலை பக்திப்பாக்களால் போற்றப்பட்டிருக்கிறது. கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புரந்தரதாசரும், அன்னமாச்சாரியும், க்ஷேத்திரய்யாவும், 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தியாகராஜ சுவாமிகளும் அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்களுடைய பக்திப் பாடல்கள் இன்றும் மக்களிடம் வாடாமலராகயிருக்கின்றன எனலாம்.

## எம்பெருமாளின் உருவச்சிலை

திருமலைத் தெய்வீகத் திருக்கோயிலில் காட்சியளிக்கும் ஸ்ரீநிவாசப் பெருமாளின் திவ்ய உருவம் கருணையும், அளவற்ற அன்பும் ஒருங்கே கொண்ட கண்கொள்ளாக் காட்சியாக அமைந்திருக்கிறது. பழங்கால வரலாற்றுப் படி பெருமாளின் சிலை 9 அடி. சாளிக் கிராம சிலையிலிருந்து அமைக்கப்பட்டுள்ளது. எம்பெருமாளின் திவ்யக் கண்கள் சமதிருஷ்டி நிலையில் காணப்படுகிறது. 2 அடி உயரமுள்ள மணி மகுடமும் பெருமாளின்முடியை அலங்கரிக்கிறது. நீண்ட முடியும் எம்பெருமாளின் தோள்களில் தவழ்வதைக் காண்கிறோம்; செதுக்கப்பட்ட மூக்கும் புன்னகைப் பூத்த பவழ வாயும் அவரது முகத்திற்குப் பொலிவூட்டுகின்றன.

பெருமாளின் திருக்காதுகளில் குண்டலங்கள் ஊசலாடுகின்றன. மகாலட்சுமி வாசம் செய்யும் மார்பு 36 அங்குலம் முதல் 40 அங்குலம் வரை விரிந்துள்ளது; திருவயிறும் அழகாக அமைந்துள்ளது; பெருமாளின் இடுப்பு ஏறத்தாழ 24 அங்குலம் முதல் 27 அங்குலம் வரை அளவுள்ளது. சதுர்புஜங்களைக் கொண்ட பெருமாளின் இரண்டு மேற் கரங்களில் சுதர்சன சக்கரமும், பாஞ்சசன்யமும் நமக்குக் காட்சியளிக்கின்றன. வரத முத்திரையாக இருக்கும் வலது கரம் தம்மை வந்து சரணடையும்படி காட்டுகிறது. இடது கரம் பக்தர்களைக் கட்டிக் காப்பாற்றும் காத்யவலம் பீடம் நிலையில் காட்சியளிக்கிறது.

ஜகந்மாதாவாகிய மகாலட்சுமி பெருமாளின் வக்ஷஸ்தலத்தில் அமர்ந்த வண்ணம் அழகாகச் செதுக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். அதனால் தான் ஸுப்ரபாதம் 28-ஆம் சுலோகத்தில் 'லக்ஷ்மி நிவாஸ!' என்று பெருமாள்அழைக்கப்படுவதைக் காண்கிறோம். ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் பூணூலும் மாலைகளும் அணிந்திருப்பதைக் கண்டு களிக்கலாம்.

எம்பெருமாள் வேஷ்டியை இடுப்பிற்குக் கீழ் அணிந்திருப்பது கண்கொள்ளாக் காட்சியாகும். அவருடைய கால்களும் திருவடிகளும் எழிற்கோலத்துடன் செதுக்கப்பட்டிருக்கின்றன. அவருடைய திவ்ய மங்கள சொரூபத்தைத் தெள்ளத் தெளிய எடுத்துக்காட்ட முழங்கால்கள் சற்று வெளியே தெரியும் வண்ணம் செதுக்கியிருக்கிறார்கள். பெருமாளின் அர்ச்சாவதாரம் ஆகமசாஸ்திரத்திற்குப் புறம்பானது என்று கூறுவர். சுவாமிக்கு அலங்காரம் செய்வித்தால், அக்காட்சி காண்பார் உள்ளத்தைக் கொள்ளை கொள்வது; பக்திக்கு விருந்தளிப்பது; உயிருணர்ச்சியைத் தூண்டிவிட்டு, செம்பொருளை உணர்த்தி திளைக்கச் செய்வது.

## மற்ற சிலைகள்

கர்ப கிருஹத்தில் மற்ற அழகான சிலைகளும் இருக்கின்றன. மூலவிக்ரஹத்தில் மறு அச்சான போக ஸ்ரீநிவாசனின் சிலை குறிப்பிடத்தக்கது. திருக்கோயிலில் நடைபெறும் எல்லா அபிஷேகங்களையும் அஃது ஏற்றுக்கொள்கிறது. ஆனால் மூல விக்ர

## அறிவிப்பு

திருமலையில் 3—10—78 முதல் 11—10—78 வரை ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் வருடாந்திர பிரம்மோற்சவம் நடைபெற உள்ளதால், இந்நாட்களின்போது கல்யாணோற்சவம், சகரஸ்ர கலசாபிஷேகம்போன்ற ஆர்ஜித சேவைகள் நடத்தப்படமாட்டா. ஆனால் பக்தர்கள் இதுபோது ரூ. 750/- செலுத்தி ஆர்ஜித பிரம்மோற்சவத்தில் பங்கேற்கலாம். பணம் செலுத்திய நாளிலிருந்து மூன்று நாட்களுக்கு மட்டுமே பக்தர்கள் அனுமதிக்கப்படுவர். மேலும் 1—10—78 முதல் 12—10—78 வரை திருமலையில் காட்டேஜுகளுக்காக அனுப்பப்படும் [தனி ஒதுக்கீடுகளுக்காக (ரிசர்வேஷன்)] எந்தவிதமான தொகையும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. முதலில் வருபவர் முதலில் கவனிக்கப்படுவர்.

ஹமோ ஒவ்வொரு வெள்ளிக்கிழமையில்தான் அபிஷேகாதிகளை பெறுகிறது.

அடுத்தபடியாக இருக்கும் மலையப்ப சுவாமி என்று அழைக்கப்படும் உத்ஸவ விக்ரகம் சகல ஆபரணங்களினால் அழகுபடுத்தப்படுகிறது. உத்ஸவ மூர்த்தி உலாவும்பொழுது ஸ்ரீதேவியும் பூதேவியும் உடன் இருக்கிறார்கள். இந்த விக்ரகங்களும் இன்னும் மற்றவைகளும் திருமலையின் பள்ளத்தாக்கில் ஒரு காலத்தில் கண்டெடுக்கப்பட்டவை.

கர்பகிருஹத்தில் இருக்கும் மூன்றுவது விக்ரகம் உக்ர ஸ்ரீநிவாச விக்ரகமாகும். ஒரு காலத்தில் இதுவே உத்ஸவ விக்ரகமாக இருந்தது என்று கூறுவர். நாலாவது விக்ரகம் கொலுவு ஸ்ரீநிவாச விக்ரகமாகும். திருக்கோயிலில் ஆட்சி நடத்தும் விக்ரகம் இதுவே. அன்றாடம் வசூலாகும் பிரார்த்தனை தொகைகளைக் கணக்குப் பார்த்து மேற் குறிப்பிட்ட விக்ரகத்திற்கே அறிவிக்கப்படுகிறது.

கர்பகிருஹத்தில் மற்றொரு விக்ரகம் வெண்ணைத்தாழியுடன் பீராட்டி ருக்மணி சமேத ஸ்ரீ கிருஷ்ண விக்ரகமேயாகும். விக்ரஹங்களைத்தவிர, கருவறையில் ஸ்ரீ பகவத்ராமானுஜரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீ ராம, லட்சுமண, சீதா, சுக்ரீவ விக்ரகங்களேயாகும். ஸ்ரீ சுதர்சன சக்கரமும் கர்பகிருஹத்தில் இடம்பெற்றிருக்கிறது.

திருமலை தெய்வீகத் திருக்கோயிலைப் பற்றி சுவையான மேலும் சில செய்திகள் இருக்கின்றன. ஸ்ரீ வேதாந்த தேசிகர் காலத்தில் வாழ்ந்த அறிவுலக மேதை பிரதிவாதிபயங்கர அண்ணன் சுவாமி அவர்கள் ஏறத்தாழ 500 ஆண்டுகளுக்கு முன் இயற்றிய தேன் சொட்டும் ஸுப்ரபாதம் விடியற்காலை மூன்று மணிக்குப் பாடப்படுகிறது. திருவேங்கடத்தில் முதன் முதலில் எம்பெருமானை சேவிக்க வந்தவர் முனி வைகாநசர் ஆகையால் வைகாநச ஆகம விதிப்படியே திருக்கோயிலில் வழிபாடு நடைபெறுகின்றது. இத்திருக்கோயிலில் நடைபெறும் பெருமை மிக்க திருவிழாக்கள், பிரம்மோத்ஸவம், அத்யயனோத்ஸவம், பவித்ரோத்ஸவம், வஸந்தோத்ஸவம், தெப்போத்ஸவம், திருக்கல்யாணோத்ஸவம் முதலியன. அத்திருவிழாக்களெல்லாம் லட்சக்கணக்கான பக்தர்களால் கண்டுகளிக்கப்படுகின்றன. அவை கண்ணையும், கருத்தையும் ஒருங்கே கவர்வன.

ஸ்ரீ வேங்கடேசுவரருக்குத் துளசியை அதிகமாய் உபயோகிப்பதில்லை. சிவன் கோயில்களில் உபயோகப்படுத்தப்



படும் வில்வ இலைகளும், மதிப்புமிக்க பச்சைக் கற்பூரமும் இங்குப்பயன்படுத் தப்படுகின்றன. மேலும் பெருமாளின் அபிஷேகத்திற்குத் தேன் பயன்படுத் தப்படுவதில்லை. புனுகு எண்ணெய்யே உபயோகப்படுத்தப்படுகின்றது. திருமலை திருக்கோயிலில் மற்றொரு விசேஷம் யாதெனில் வராகமூர்த்திக் குத்தான் முதன்முதலில் ஆராதனையும் நைவேத்யமும் நடைபெறுகின்றன.

## சிற்பச்சிறப்பு

ஸ்ரீரங்கத்தைப்போல் அவ்வளவு பெரிய திருக்கோயிலாக இல்லாமற் போனாலும், திருமலை திருக்கோயில் இரண்டு ஏக்கர் பரப்பில் நீண்ட சதுரமாக அமைந்துள்ளது. இரண்டு கோபுரங்களும், இரண்டு பிராகாரங்களும் காண்பார் உள்ளத்தைக் கொள்ளை கொள்வதாகும். திருக்கோயிலின் பிரதான வாயிலுக்கு முகத்துவாரம் என்று பெயர். பதினொரு அடி அகலமுடையது. ஆந்திரர்களும், பல்லவர்களும், சோழர்களும் இத்திருக்கோயிலுக்குப் பேராதரவு அளித்தபோதிலும், விஜயநகரத்தார் காலத்தில் தான் இக்கோயில் கலைவண்ணம் பெற்றுப் பெரும் புகழடைந்தது. அரங்கநாயகலு மண்டபமும், பிரதிம மண்டபமும், அவற்றில் விஜயநகரத்து மன்னர்களின் சிலைகளும் கவர்ச்சியாக அமைக்கப்பட்டிருக்கின்றன. 1509–1530 வரைஆண்ட பேரரசர் கிருஷ்ண தேவராயர் சிலையும் இடம் பெற்றிருக்கின்றது. மற்ற மண்டபங்களில் குறிப்பிடத்தக்கவை ரங்கமண்டபமும், திருமலைராய மண்டபமுமாகும். திருக்கல்யாண மண்டபத்தில் சிற்பச்சிறப்பு மிக்க இருபத்தொன்பது தூண்கள் மண்டபத்தின் அழகைப் பெருக்குகின்றன. தென்னிந்தியாவில் காணப்படும் பத்து 1008-கால் கொண்ட மண்டபங்களில் 1464-ல் சாளுவமல்லையனால் கட்டப்பட்ட மண்டபம் ஒன்று திருமலையில் எடுப்பாக அமைந்துள்ளது. இம்மண்டபம் பெருந்திரு விழாக்களுக்குப் பயன்படுகின்றது. இத்தகைய மண்டபங்கள் இந்து மதக் காவலர் என்று புகழ்பெற்ற விஜயநகர அரசர்களால் கட்டப்பட்டவை.

## திருக்கோயிலின் விமானம்

திருமலை திருக்கோயிலின் விமானம் பொன் தகடு கொண்ட மூன்றடுக்குகளால் ஆனது. அதன்மேல் விமான வேங்கடேசுவரர் என்று அழைக்கப்படும் திருவேங்கடத்தான் மறு அச்சு பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். விமான பிரதக்ஷணத்தின் வட புறம் ஒரு கல்லின்மேல் அவ்வுருவத்தைக் கண்டுகளிக்கலாம். த்வைத மதத்தை ஸ்தாபித்த ஸ்ரீ மத்வாச்சாரியாரின் சீடர்களை அவ்விமானம் ஈர்க்க அதனால் அத்திருக்கோயிலைத்தரிசிக்கப் பலர் திருமலைக்குச் சென்று வருகின்றனர்.

திருமலை திருக்கோயில் விசிஷ்டாத்வைத மதத்தை புனருத்தாரணம் செய்த ஸ்ரீ பகவத் ராமானுஜருக்கும், பெரிய திருவடியான கருடபகவானுக்கும், விஸ்வக்சேனருக்கும் ஆங்காங்கு சந்நிதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. துவாரபாலகர்களுக்கும் சந்நதியின் முன்னால் தக்க இடம் அளிக்கப்பட்டிருக்கிறது.

## திருக்கோயில் நிருவாகம்

திருமலை தெய்வீகத் திருக்கோயில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் ஆந்திரமாநில இந்து அறநிலையத்துறையின் கீழ் செவ்வனே நிர்வகிக்கப்படுகிறது. தேவஸ்தானத்திற்கு உதவியாக பலர் அடங்கிய குழுவொன்றும் சட்டப்படி அமைக்கப்பட்டிருக்கிறது.

திருமலைத் திருக்கோயிலுக்கு வரும் நிகர வருமானமெல்லாம் அக்கோயிலையும் மற்ற கோயில்களையும் புதுப்பிக்கவும், மதத்தைப் பராமரிக்கவும், கல்வி நிலையங்களைச் செவ்வனே நடத்தவும், இன்கலைகளைப் போற்றவும் பயன்படுத்தப்படுகிறது. பாரத நாட்டின் பண்பாட்டிற்கும் புலமைக்கும் திருக்கோயில்கள் எங்கும் உரைகல்லாக விளங்குவதுபோல் திருமலை திருக்கோயிலும் தொல்புகழ் வாய்ந்த திருக்கோயிலாக விளங்குகிறது என்று துணிந்து கூறலாம்.

# வாழ்த்துகிறோம்

இந்திய விடுதலைப் போராட்டத்தின்போதும், இந்திய அரசியல், சமூக கலாசார பிரச்சனைகளின் போதும், இந்திய மக்களின் ஒருமித்த குரலாக விளங்கி, தற்போது பத்திரிகை உலகில் ஒருதனி இடம்பெற்று விளங்கும் 1878-இல் திரு. ஜி. சுப்ரமண்ய ஐயரவர்களின் முன்முயற்சியால் ஆரம்பிக்கப்பட்டு இவ்வாண்டு தன்னுடைய நூற்றாண்டு விழாவினைக் கொண்டாடும் 'இந்து' பத்திரிகைக்கு 'ஸப்தகிரி' தன் உளங்கனிந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றது. தன் அரும்பணியைத் தொடர்ந்து செவ்வனே ஆற்றிட அவ் ஏழுமலையானின் அருளொளி அப்பத்திரிகைக்கு என்றென்றும் வீசுவதாகுக!

# கம்பராமாயணத்திலே

# திருப்பதி மகாத்மியம்

பி. ஸ்ரீ.

காடுகளிலும் காட்டுச் சார்பான இடங்களிலும் வசித்த மக்கள் திருமாலை வழிபட்டுவந்ததாகத் தொல்காப்பியர் கூறுவதால், தென்னிந்தியாவின் ஆதி சமயங்களில் வைஷ்ணவமும் ஒன்றென்று ஊகிக்கலாம். 'முக்கோற் பகவர்' (திரிதண்ட சந்யாசி) என்ற துறவிகள் காட்டுப் பக்கங்களில் சஞ்சரித்து வந்ததாகப் பழைய தமிழ் நூல்களிலிருந்து அறிகிறோம். விஷ்ணு பக்தியில் சிறந்தவர்களைப் பாகவதர் என்றும், வைஷ்ணவ சமயத்தைப் பாகவத தர்மம் என்றும் கூறுவதுண்டல்லவா? எனவே பாகவத தர்மத்தைப் பின்பற்றிய துறவிகளே பகவர் என்று ஊகிப்பது தவறாகாது. நீண்ட காலமாகத் தென்னாட்டில் பகவர்களும் துறவிகளல்லாத அடியார்களும் தலயாத்திரை செய்துகொண்டே பாகவத தர்மத்தின் சிறந்த லட்சியங்களையும் நோக்கங்களையும் பரப்பிவந்தனர் என்று கருதலாம்.

காடுகளிலும் காடு சார்ந்த இடங்களிலும் திருமாலை வழிபட்டவர்கள் காணப்பட்டதாய்த் தொல்காப்பியம் தெரிவிப்பதிலிருந்து ஆதியில் விஷ்ணு கோயில்கள், இயற்கையரசி மகோன்னதமாய்க் கொலுவிருக்கும் காட்டுப் பக்கங்களில் அமைந்தன என்று ஊகிப்பது தவறாகாது. அப்படி அமைந்திருந்த அதி புராதன திவ்ய ஸ்தலங்கள் திருவரங்கம், திருப்பதி, திருமாலிருஞ்சோலை முதலியன. "குன்றுடு கொழுமுகில் போல்......நின்றுடு கண மயில் போல்" நிறமும் அழகும் வாய்ந்த பெருமாள் என்று பெரியாழ்வாராலும் "வான மாமலையே! அடியேன் தொழ வந்தருளே" என்று நம்மாழ்வாராலும் சரணாகதி செய்யப் பெறும் திருமால், மலைக்காடுகளைச் சார்ந்த திருவேங்கடத்திலும் திருமாலிருஞ்சோலையிலும் சரித காலத்திற்கு முன்பே கோயில் கொண்டு நம் மக்களை வாழ்வித்துவருவது பொருத்தமாகும்.



தேனேங்கு சோலைத் திருவேங்கடம் என்றும்
வானேங்கு சோலை மலையென்றும்

சொல்லப் பெற்ற திவ்ய ஸ்தலங்களில் பகவர்களான துறவிகளும் பிற அடியார்களும் கூடுவதுண்டு. கூடிப் பிரிந்தவர்கள் நாடெங்கும் பக்திப் பெருங் காதலையும் கொள்கைகளையும் பரப்பி வந்திருக்க வேண்டும்; சாதாரண யாத்திரிகர்களுக்கும் ஓரளவு மதக் கல்வி அளித்திருக்க வேண்டும்.

நீண்ட காலத்திற்கு முன்பே திருவரங்கத்தைப்போல் திருவேங்கடமும் பாகவத தர்மத்தின் வளர்ப்புப் பண்ணையாக இருந்தது. முதலாழ்வார்கள் காலத்திலே திருவரங்கத்தைக் காட்டிலும் திருவேங்கடம் பிரபலமாக இருந்தது என்றுகூட ஊகிக்கலாம்.

சிலப்பதிகார காலத்திலே—அதாவது சரித ஆராயச்சிக்காரர்களின் அபிப்ராயப்படி முதலாழ்வார்களின் காலத்திற்கும் முன்பே—திருவரங்கம் யோக நித்திரை செய்யும் பகவானுடைய சயனத் திருக்கோலத்திற்கும், திருமலை 'வீங்கு நீரருவி வேங்கடம் என்னும் ஓங்குயர் மலயத்து உச்சி' அதே பெருமானின் நின்ற திருக்கோலத்திற்கும் பேர்போன யாத்திரை ஸ்தலங்களாக இருந்தன. தென்னாட்டுக் கோடியிலுள்ளவர்களும் வடநாட்டாரும் யாத்திரிகர்களாக வந்து கொண்டிருந்தனர். தென்னாடும் வடநாடும் ஒருங்கே தொழும் பெருமை திருவரங்கத்தைக் காட்டிலும் திருவேங்கடத்திற்கு உண்டு.

ஆழ்வார்களின் காலத்திற்கு முன்பும் பின்பும் திருமலை, 'வட மாலவன் குன்றம்' என்று சமீபத்தில் வாழ்ந்த பாரதியார் பாடியிருப்பது போல், 'நிலங்கடந்த நெடு முடி யண்ண'லின் திருமலையாகப் பேரும் புகழும் பெற்றிருந்தது. 'அன்று ஞாலம் அளந்த பிரான் பரன்-சென்று சேர் திருவேங்கட மாமலை' என்று ஆழ்வாரின் அருளிச் செயல் தென்னிந்தியப் பெருமக்களின் இதய கானமேயாகும்.

ஸ்ரீ ராமானுஜர் காலத்திற்குப் பின்பு வாழ்ந்தவன் கவிச் சக்ரவர்த்தியாகிய கம்பன். திருவரங்கத்திற்கு அருகே வாழ்ந்து கம்பராமாயணம் என்னும் தமிழ்ப் பெருங்காவியத்தை இயற்றியவன். பெரிய கோயிலாகிய திருவரங்கத்தைக் குறித்துப் பிரஸ்தாபிக்கிறான் தன் காவியத்தினிடையே; திருமலையைக் குறித்த பிரஸ்தாபமும் கம்பராமாயணத்தில்காணப்படுகிறது. திருவரங்கத்தைக் காட்டிலும் அதிக அளவில் வெளிப்படையாகத் திருமலை பிரஸ்தாபிக்கப்படுகிறது.



# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ், கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம்
சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன்
19-வது பிளாக் [கோயில் வீதி.
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
35, வனப்பட்டரை வீதி,
தெப்பக்குளம், திருச்சி-2.

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

திருமதி.ஏ.வனஜாகிருஷ்ணமூர்த்தி,
46, பழனியாண்டவர்கோயில்தெரு,
களஞ்சியம் ஏஜென்ஸீஸ்,
கொஸபாளையம், ஆரணி-1.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட்,
ஜெய்பூர் (அஞ்சல்)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. ஏ. அருணசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு. எஸ். என். கிருஷ்ணசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. கே. எஸ். கோதண்ட
ராமய்யா, M.A., B.O.L.,.B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. பி. விஜயேந்திரா.
நியூஸ் ஏகஜண்ட்,
நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள்
தஞ்சாவூர். [வீதி,

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபையா பேட்டை,
சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. வி. ஆறுமுகம்,
பழைய இரும்பு வியாபாரம்,
72. காந்தி மார்க்கட்,
பொள்ளாச்சி-642001.

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல்,
கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸாசார்யா,
4, சௌந்தரம்மாள் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. வி. திருவேங்கடம்,
73, காளிமுத்து பிள்ளை லேன்,
திண்டுக்கல்.

திரு. எஸ். நாகராஜகுப்தா.
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல்
மர்ச்சண்ட,
கிழக்கு பஸ் நிலையம்,
சித்தரதுர்க்கா.

திரு. ஏ. என். கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராம்மோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன் பேட், வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

கேப்டன். டி. இ. என். சாரி, பி.ஏ.
16, ஜி. எஸ். டி. ரோடு,
செங்கற்பட்டு-603001.

வேதம் முதலான நூல்களில் கூறியுள்ள பொருள்களுக்கெல்லாம் முடிவான பரம்பொருளைக் காட்டுகிறது வேங்கடமலை ஸ்ரீ வேங்கடேச வடிவிலே என்பதை எடுத்த எடுப்பிலே வற்புறுத்துகிறான் கவிஞன். ஒரு கதாபாத்திரத்தின் வாயிலாகத்தான் பேசுகிறான். தென் திசையில் சீதையைத் தேடுமாறு அனுப்பிவைக்கும்போது சுக்ரீவன், அனுமன் முதலான வானர வீரர்களை நோக்கி யாத்ரா மார்க்கத்தைச் சொல்லும்போதுதான் திருப்பதியின் பிரஸ்தாபம் வருகிறது.

### குலகிரிகளைக்காட்டிலும் சிறந்தது

எட்டு மலைகளைக் குலகிரிகளாக மதித்தனர் நம் முன்னோர். கயிலையும் இமயமும் இருவேறு குலகிரிகளாய்க் கருதப்பட்டன. தெற்கேயுள்ள நீலகிரியும் ஒரு குலகிரியாய் மதிக்கப் பட்டது. வட இந்தியாவுக்கும் தென்னிந்தியாவுக்கும் இடையேயுள்ள விந்தியமலையும் ஒரு குலகிரிதான். வேறு மூன்று மலைகளையும் (மந்த்ரம், நிடதம், ஹேமகூடம்) சேர்த்து ஆதியில் குலகிரிகள் ஏழாய்க் கணக்கிடப்பட்டிருந்தன. பிறகு கந்தமாதன மலையையும் சேர்த்து குலகிரிகளை எட்டாக்கிவிட்டனர். இந்தக் குலகிரிகளெல்லாம் பரத கண்டத்தின் சிறந்த மலைகளாய்க் கருதப்பெற்றன.

கம்பராமாயணத்திலே, சுக்ரீவன் தென் திசையில் செல்வோருக்குத் தேடவேண்டிய இடங்களையும் வழிகளையும் கூறும்போது, விந்தியமலை ஹேமகூடமலை என்ற இரண்டு குலகிரியும், அருந்ததி முதலான வேறு சில மலைகளையும் குறிப்பிட்டுத் தேடச் சொல்லுகிறான். பிறகு திருப்பதி மலையைச் சிறப்பாய்க் குறிப்பிடுகிறான். விந்தியமலை முதலானவற்றைப் பாராட்டுவதுபோல் திருப்பதியைப் புகழ்வதுடன் திருப்தி யடையாமல் ஒரு புதிய முறையில் திருப்பதியைச் சிறப்பிக்க விரும்புகிறான் கவிஞன், சுக்ரீவன் வாயிலாக. ஆம்; மற்ற மலைகளைக்காட்டிலும் அதிக அளவில் திருப்பதியைச் சிறப்பித்துப் பேச விரும்புகிறான்.

இத்துறையில் கம்பனுடைய மேதா விலாசம் எப்படிப் பிரவர்த்திக்கிறது என்பதைச் சற்றுக் கூர்ந்து கவனிப்போம்;

> வடசொற்கும் தென் சொற்கும் வரம்பிற்றாய்,
> நான்மறையும் மற்றைநூலும்
> இடைசொற்ற பொருட்கெல்லாம் எல்லையதாய்,
> நல்லறத்துக்(கு) ஈறாய், வேறு
> புடைசுற்றும் துணையின்றிப் புகழ் பொதிந்த
> மெய்யேபோல் பூத்துநின்ற
> அடைசுற்றும் தண்சாரல் ஓங்கிய வேங்
> கடத்திற்சென்(று) அடைதிர் மாதோ.

(வரம்பிற்றாய் - வரம்பாகி. நான்மறை - நாலு வேதம். இடைசொற்றதம்மிடத்தில் சொல்லியுள்ள. புடைசுற்றும் துணையின்றி - பக்கத்தில் எடுத்துச் சொலத்தக்க உபமானப் பொருள் இல்லாமல். அடை - தேன் கூடுகள். தண்சாரல் - குளிர்ந்த மலைப் பக்கங்கள். அடைதிர் - அடையுங்கள்.)

சுக்ரீவ மகாராஜா பேசும் திருப்பதி மாகாத்மியத்திலே, 'புகழ் பொதிந்த மெய்யேபோல்' ஓங்கி நிற்கின்றது திருமலை. 'உண்மைப் பொருள் ஒன்றே; அறிஞர் பலவாகக் கூறுகின்றனர்' என்ற வேதப் புகழ் பொதிந்த ஸத்தியம்போல் நிமிர்கின்றது திருவேங்கடம் என்பது கம்பன் கருத்து.

இப்படித் திருப்பதியின் புகழொளியை வருணிக்கும் கவிஞன்,



இம்மலைச் சாரல்களைக் குளிர்ச்சியாய்த் தேன் கூடுகள் நிரம்பிய காடுகள் உள்ளனவாக வருணித்திருக்கிறான். இத்தேன் கூடுகளில் ஒன்றை ஒரு குருடன் கண்டு காட்டியதாகவும், அக்கூட்டை நோக்கிக் கூனன் நிமிர்ந்தோடியதாகவும், அத்தேனை முடவன் ஏறி எடுத்ததாகவும், ஊமை 'எனக்கும் வேணும்' என்றுகேட்டதாகவும் பிற்காலக் கவிஞர் ஒருவர் பாடியிருக்கிறார்.

'தீராத வினையெல்லாம் திர்த்து வைப்பான் கோவிந்தன்' என்ற சாதாரண மக்களின் நம்பிக்கையையும், 'திருவேங்கட மாமலை - ஒன்று மே தொழ நம் வினை ஓயுமே' என்ற ஞான பூர்ணரான நம்மாழ்வாரின் திடநம்பிக்கையையும், மேலே சொன்ன குட்டிக் கதை அழகாக வெளியிடுகிறது.

கம்பனுடைய பக்தி விசுவாசங்களை மேலே சொன்ன பாட்டிலும், அடுத்து வரும் பாடல்களிலும் காண்கிறோம். தன்னுடைய பக்தி விசுவாசங்களை எவ்வளவு அதிசயமாகக் கவிஞன் வெளியிடுகிறான் என்பதையும் உற்று நோக்குவோம்.

## சொன்னதும் கண்டதும்

வேங்கடமலையின் பெருமையில் ஈடுபட்டுப் பேசும்போதே சுக்கிரீவன் வானர வீரர்களை நோக்கி, 'அந்த மலைப் பிரதேசத்தில் பொய்ச் சேருங்கள்' என்றுதான் முதன் முதல் சொல்லிவிடுகிறான்.

ஓங்கியவேங் கடத்தில்சென்(று) அடைதிர்
மாதோ.

இப்படிச் சொன்னதும் திருமலையிலுள்ள பரம பாகவதர்களான பெரியோர்களைக் குறித்த நினைவு வருகிறது. 'திசை நோக்கித் தொழுதற்கு உரிய அவ்வளவு பெருமைவாய்ந்தவர்கள்' என்கிறார்கள். அந்த வேங்கடமலையில் அருவினையின் பெரும்கைவரான ஞானிகள் இருக்கிறார்கள். அப்பெரியோரை அங்கே நேரில் போய்த்தான் வணங்க வேண்டுமென்பதில்லை; இங்கிருந்தே திக்கு நோக்கி வணங்குவதற்கும் உரியவராவர் என்கிறான்.

இந்தச் சுக்கிரீவன் வாக்கிலே, அந்தப் பிறவிப் பகைவர்களான தத்துவ ஞானிகளின் மகிமை தொனிப்பதோடு, 'அங்கே போய்ச்சேர்ந்து அந்த ஞானிகளோடு கலந்து இந்த வானர வீரர்களும் பிறவிப் பகைவராகி மோட்ச ஸ்ாம்ராஜ்யத்தை அடைந்து விடலாகாதே!' என்ற கவலையும் தொனிக்கின்றது.

எனவே முதன் முதல் 'வேங்கடத்தில் சென்று அடைதிர்' என்று சொன்ன சுக்கிரீவன், ஏதோ உத்ஸாகமாகப் போக்கிலே சொல்லிவிட்டதொன்றை 'வாபஸ்' வாங்கிக்கொள்வது போல,

கோடுறுமால் வரையதனைக் குறுகு
திரேல்
உம்நெடிய கொடுமை நீங்கி
வீடுறுதிர்!

(கோடு உறு மால் வரை - சிகரம் பொருந்திய பெருமைவாய்ந்த திருவேங்கடம். குறுகுதிரேல் - நெருங்கிவிட்டீர்களானால், வீடு உறுதிர்-மோட்சம் அடைவீர்கள்.)
என்று எச்சரிக்கை செய்கிறான்.

இப்போது இவர்களுக்கு வேண்டியது காரிய சித்திதான்: மறு உலக மன்று, இவ்வுலகம்தான். இந்த உலகத்திலே ராமகாரியம் என்ற கைங்கர்யம் ஒன்றேதான். இதற்காகத் திருமலையிலுள்ள பாகவதர்களையும் தபஸ்விகளையும் திக்குநோக்கித் தண்டனிட்டு, அவசரமாய்ப் போய்வர வேண்டும் என்று கட்டளையிடுகிறான் மகாராஜா.

ஆனால், வானர வீரர்கள் என்ன செய்கிறார்கள்? அனுமன் முதலானவர்கள் திருப்பதி மலையை அடைகிறார்கள். வந்து சேர்ந்ததும் சுக்கிரீவ ஆக்ஞையை மீறவும் துணிகிறார்கள். 'மகாராஜா திருப்பதி மாகாத்மியம் பேசிய தோரணைதான் அது: போகக்கூடாது என்பது அவர் கருத்தன்று' என்பதாகத் தீர்மானிக்கிறார்கள்.

சுக்கிரீவன் வருணித்த முனிவர்களையும் தத்துவ ஞானிகளையும் வேதம் வல்லோரையும் இப்போது வானரர்கள் நேரில் கண்டு கொள்கிறார்கள். ஆகாசகங்கை, பாபவிநாசம் முதலான அருவிப் பக்கங்களில் பார்க்கிறார்கள். அவர்களை அருவி நீராடும் போதே, 'அதோ அவர் முனிவர்; இதோ இவர் வேத சாஸ்திர நிபுணர்; அதோ தத்துவ ஞானிகள்; இதோ சித்தர்கள்' என்றெல்லாம் கண்டு கொள்கிறார்களாம்.

(29-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தமும் திருவேங்கடமுடையானும்

திரு. தி. அ. கிருஷ்ணமாசார்யார்.

விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயம் வேதத்தில் சொல்லப்பட்டிருப்பதால் அநாதி. அது சிற்சில காலங்களில் சிலரால் மறைந்திருந்து அவ்வப்போது அவதரித்த ஆழ்வார்களாலும் ஆசாரியர்களாலும் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆழ்வார்களில் தலைவர் நம்மாழ்வார். ஆசாரியர்களில் தலைவர் எம்பெருமானார். இவ்விருவராலும் தத்தம் அவதாரகாலங்களில் இந்த ஸம்ப்ரதாயம் விசேஷமாக ப்ரகாசப்படுத்தப் பட்டிருக்கிறது.




ஆழ்வார்கள் உகந்தருளின திவ்ய தேசங்கள் நூற்றெட்டனுள் கோயில் திருமலை பெருமாள் கோயில் என்னும் மூன்றும் சிறந்தவை என்று கருதப் பட்டன. ஆழ்வார்கள் எல்லாராலும் மங்களாசாஸனம் செய்யப்பட்டமையால் கோயில் என்னும் ஸ்ரீரங்கம் முதன்மை பெற்றது. தொண்டரடிப் பொடியாழ்வார் தவிர மற்ற ஒன்பது ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப் பெற்றமையால் இத்திருமலை இரண்டாவதாக எண்ணப்பட்டது. முன்பு ஒருகால் ஸ்ரீரங்கத்து அரையர் இத்திருமலைக்கு எழுந்தருளியிருந்த போது அவரை இங்குள்ளார் இயலைப் பாடும்படி ப்ரார்த்தித்தார்களாம். அவர் தமது வழக்கம்போல் 'பதின்மர் பாடும் பெருமாள்' என்று திருவேங்கடமுடையானுக்கு விருது கூறி இயலைப்பாடத் தொடங்க, இங்குள்ளார் அவ்விருது நம்பெருமாள் ஒருவர்க்கே தகும், சோழியன் (தொண்டரடிப் பொடியாழ்வார்) கெடுத்தனுல் திருவேங்கடமுடையானுக்கு அது பொருந்தாது என்றூர்களாம். இந்த ஐதிஹ்யம், கோயில் முதலாவது, திருமலை இரண்டாவது என்ற விஷயத்தில் தெளிவைப் பிறப்பிக்குமன்றே?

ஒருவாறு நோக்கினுல் இத்திருமலையே முதலாவது என்று சொல்லலாம். திருப்பாணுழ்வார் லோகஸாரங்க மஹாமுனி தோளில் வந்து ஸ்ரீரங்கநாதனைப் பாதாதி கேசாந்தமாக அநுபவித்து அமலனுதிபிரான் பாடினர். அதில் கடைசியில் 'அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணுவே' என்றிருப்பதால் அரங்கனைக் கண்ட கண்களால் மற்றொருவரைக் காணுத அவர் பதிவ்ரதை என்று சொல்லத் தகுந்தவர். தொண்டரடிப் பொடிகளும் அத்தகையரே. அப்படிப்பட்ட திருப்பாணுழ்வாரும், 'விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்', என்று முதற்பாட்டிலும், 'மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்ருன் அரங்கத்தரவினணையான்,' என்று மூன்ரும் பாட்டிலும் திருவேங்கடமுடையானைப் பாடினர். அவ்விடத்து வ்யாக்யானத்தை ஸேவித்தால், ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து எம்பெருமான் இறங்கிவரும் போது திருமலையில் திருவேங்கடமுடையானுய் நின்று, பிறகு கோயிலில் அரங்கனுய்ப் பள்ளி கொண்டருளினுன் என்று விளங்குகிறது. இதனுல் (முதலில் திருமலையில் நின்றருளின காரணத்தால்) திருமலை முதல் ஸ்தானத்தை வகிக்கிறது என்று சொல்லத் தடையில்லையன்றே? மேலெடுத்த அமலனுதிபிரான் பாட்டுப் பகுதிகளிலிருந்து திருவரங்கச் செல்வனும் திருவேங்கடத்துறை செல்வனும் ஒரே வ்யக்தி என்று தெளியப்படுகின்றமையால், தொண்டரடிப் பொடியாழ்வார் பக்தியின் மிகுதியால் அரங்கனைப் பாடியவர் திருவேங்கடமுடையானையும் பாடியவரே ஆவர். பேசிற்றே பேசும் ஏக கண்டர்களன்றே ஆழ்வார்கள். ஆக ஒரு கண் கொண்டு பார்த்தால் திருமலை முதன்மை பெறும் என்பது துணியப்படும்.

நம்மாழ்வாரும் எம்பெருமானுரும் இத்திருமலையில் மிகவும் ஈடுபட்டு ஸித்

தாந்தத்தை வெளிப்படுத்தினார்கள். நம்மாழ்வார் பெரிய பெருமாள் விஷயமாக, 'கங்குலும் பகலும்' என்ற பதிகம் பாடினர். அதில் அவர்க்குத் தானான தன்மையில் அநுபவம் இல்லே. ப்ரேமம் அதிகமாகி ஒரு நாயகியின் தசையை அடைந்து, பேசலாம் என்று பார்த்தார். தம் துக்கத்தைத் தம்மாலும் பேச முடியாத அவ்வளவு துக்கநிலே ஏற்பட்டபடியால் தாய்ப் பாசுரமாகப் பேசினர். இத்திருவாய் மொழிக்குப் பொருள் சொல்லும் போதெல்லாம் ஸ்ரீ பராசரபட்டர், 'ஆழ்வாருடைய ப்ராவண்யம் நமக்கு இல்லாமையால் அவரது நிலேயை அறியமுடியாது. ஆகையால் இப்பதிகத்திற்கு நாம் எப்படி பொருள் சொல்லப் போகிறோம்' என்றருளிச் செய்து தலேயில் கையை வைத்துக் கொண்டிருப்பாராம். இந்த ஐதிஹ்யத்தால் ஆழ்வாருடைய ப்ராவண்யம் எல்லே கடந்து, தம்மையும் தாம் மறந்திருந்தமை விளங்குகின்றதல்லவா?

இனி திருவேங்கடமுடையானிடத்தில் நம்மாழ்வார் தானான தன்மையில் சாஸ்த்ரார்த்தங்களே வெளிப்படுத்தி அனுபவித்த நிலேயைப் பார்க்கலாம். த்வயம் என்ற மந்திரத்தின் முதற் பகுதியில் சொல்லப்படுவது சரணுகதி அதாவது பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளேத் தஞ்சமாகப் பற்றுதல். இரண்டாம் பகுதியின் பொருள் அச்சேர்த்தியில் கைங்கர்யத்தை ப்ரார்த்தித்தல். இந்தச் சரணுகதியையும் கைங்கர்ய ப்ரார்த்தனேயையும் முறையே அகலகில்லேன், ஒழிவில் காலம் என்னும் இரண்டு பாட்டுக்களாலும் நம்மாழ்வார் திருவேங்கடமுடையானிடத்திலே செய்தார். மாறனடி பணிந்துய்ந்தவரான எம்பெருமானுரும், ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் 'ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா' என்று பரப்ரஹ்ம சப்தத்தின் பொருளான அலர்மேல்மங்கையுறை மார்பனிடத்தில் தமக்கு பக்தி உண்டாக வேண்டுமென்று அருளிச் செய்தார். வேதார்த்த ஸங்க்ரஹம் என்று ப்ரஸித்தமான க்ரந்தமும் திருவேங்கடமுடையானெதிரில் எம்பெருமானுர் செய்த உபந்யாஸமே ஆகும். ஆக ஆழ்வாரும் எம்பெருமானுரும் மிக உகந்த ஸ்தானமாதல் பற்றிக் கோயிலேக் காட்டிலும் ஆதரிக்கத் தகுந்த இடம் திருமலே என்பதாயிற்று. இதனுல் கோயிலுக்குக் குறை ஒன்றும் ஏற்படாது. நஹி நிந்தா ந்யாயத்தை இங்கு நினேக்க.

ஆசார்யருசிபரிக்ருஹீதமான அர்த்தமே இவ்வாத்மாவுக்குத் தஞ்சம் என்பர் பெரியோர். இதை, கண்ணபிரான் தரும புத்திரனே பீஷ்மரிடத்தில் தர்மோபதேசம் பெறும்படி ஏவினதாகவும், தருமபுத்திரன் பீஷ்மரை அணுகி, 'கோ தர்மஸ் ஸர்வதர்மாணும் பவத: பரமோ மத:' உயர்ந்த தர்மமாகத் தேவரீர் கருதியிருக்கும் தர்மம் யாது? என்று கேட்டதாகவும், அதற்கு பீஷ்மர்,

என்பதுபோல், ஆழ்வார் செய்யாத தொண்டு இல்லை என்பது விளங்கு வதால் ஆழ்வார் வாக்கு உயர்ந்தது அல்லவா?

இனி அகலகில்லேன் என்ற பாசுரத் தில் அநுஸந்தித்த அர்த்தத்தைச் சிறிது அனுபவிக்கலாம். அவ்வர்த் தமே சரணுகதி என்ற ப்ரபத்தி ஆகும். பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு குணபூர்த்தியுள்ள திருவேங் கடமுடையானை, ஆழ்வார் தம் முடைய புகலில்லாமையைச் சொல் லிக்கொண்டு சரணம் புகுகின்ருர் என் பது இப்பாசுரத்தால் விளங்குகின்றது. 'அகலகில்லேனிறையுமென்று அலர் மேல் மங்கையுறைமார்பா' என்ற முதலடியில் பிராட்டியைப் புருஷகார மாகப் பற்றுகிருர். பிராட்டியால் பேறு பூர்த்தியாகிறது. மோக்ஷம் நமக்குக் கிடைக்கவேணுமாஞல் அதற்கு நான்கு காரணங்கள் இன்றி யமையாதன என்பர். அவையாவன, சரீரம் ஆத்மா ஸர்வேச்வரன் பிராட்டி என்பன. வராகப் பெருமாள் பூமிப் பிராட்டிக்கு உபதேசிக்கும்போது, 'सुस्वस्थे शरीरे सति' என்று சரீரத்தைப் பேற்றுக்கு உபாயமாக அருளிஞர். நிவ்ருத்தனுன (தன்னைத் தானே காப் பாற்றிக் கொள்வதிலிருந்து மீண்ட) ஆத்மா காரணம் என்பது திருமந்திரத் தில் நம: என்கிற பதத்திஞல் தெரிய வருகிறது. 'அஹம் த்வா ஸர்வபா பேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்ற சரமச்லோகத்திஞல், ஸர்வேச்வரனுன தான் காரணம் என்பதைக் கண்ண பிரானே அருளிச் செய்தான். பிராட்டி புருஷகாரமாஞல் அல்லது ஸர்வேச் வரன் கார்யம்செய்யமாட்டானென்று த்வயமந்திரத்தில் தெரியவருதலால், அவளால் தான் கார்யம் பூர்த்தி யாகும் என்று விளங்குகிறது. அதஞல் தான் ஆழ்வார் பிராட்டியைப் பற்று கிருர் முதலடியிஞலே.

பிராட்டி இருந்தால்தான் நம் காரி யம் கைகூடுமென்பது, இராவணன் காகாசுரன் என்ற இருவரது கதை களையும் நோக்குவார்க்கு விளங்கும். இராவணன் சாப பயத்திஞல் ஸீதை யிடம் சேஷ்டை செய்யவில்லை. காகா சுரனே ஸீதையினிடம் பெருத்த அப சாரத்தைச் செய்தான். இராவண னும் முதல் நாட்போரில் 'சசால சாபஞ்ச முமோச வீர:' என்னும்படி செயலற்று நின்ருன். காகாசுரனும், 'த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத:' என்றபடியே இராம பிரான் முன்னிலையில் செயலற்று விழுந்தான். செயலற்ற நிலை நோக்கி இராமபிரான் காப்பாற்றுவதாஞல் இருவரையும் காப்பாற்ற வேண்டும். அல்லது இருவரையும் கொன்ருெழிக்க வேண்டும். அதற்கு மாருக, காகா சுரனைக் காட்டிலும் பாபம் குறைந்த இராவணனைக் கொன்றதும், இராவ ணனைக் காட்டிலும் பாபியான காகா சுரனைக் கொல்லாததும் ஏன் என்று கேட்பார்க்கு, இராவணன் செயலற்று நின்றபோது பிராட்டி அருகில் இல் லாததும், காகம் செயலற்றுக் கிடந்த போது பிராட்டி அருகில் இருந்ததும் தான், இராவணன் மாண்டதற்கும் காகம் உயிர் தப்பியதற்கும் முறையே காரணம் என்று ஆசார்யர்கள் அருளிச் செய்திருப்பது தெளிவைப் பிறப்பிக்கவல்லது. 'பிராட்டியின் வார்த்தையை எம்பெருமான் கேட் பனே. அவன் யாருக்கும் வசப்படாத ஸ்வதந்திரன் அன்ருே' என்று மேலும் கேட்பார்க்கு ஒன்று கூறித் தெளிவு பிறப்பிக்கலாம். அதாவது, இராவண வதம் முடிந்த பிறகு திருவடி (அனு மான்) ஸீதையிடம் சென்று, 'உங்களை முன்பு நலிந்த இந்த ராக்ஷஸிகளை வதைக்க எனக்கு அநுமதி செய்ய வேணும்' என்று கேட்க, 'இவர்களிடம் தயை பாராட்ட வேணும் நீர். உலகத் தில் தவறு செய்யாதவர் யாரும் இலர்' என்று கூறித் திருவடியைப் பொறுப்பிக்கவில்லையா? பிடித்தது விடாத குரங்குசாதியில் பிறந்த அநு மானையும் பொறுப்பித்த பிராட்டி தன் சொல்லைத் தட்டாத எம்பெரு மானைத் திருத்தி நம் கார்யம் செய்ய மாட்டாளோ? என்பதுதான்.

அவதார காலத்தில் பிராட்டிக்குச் சிறிதுபோது பிரிவென்பது நேருமாகி லும், திருவேங்கடமுடையான் திரு மார்பில் இறையும் அகலகில்லாமல் பிராட்டி உறைகின்ருளாகையால், தம் பேறு தப்பாதென்று திருவுள்ளம் பற்றுகிருர் ஆழ்வார். அப்படி தாம் பற்றின புருஷகார பலத்தால், எம் பெருமானிடத்தில் தலையெடுக்குமவை யான வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம் (குற் றத்தை நற்றமாகக் கொள்ளுதல், தலைமை, தாழ்ந்தவரோடும் புரை யறக்கலத்தல், கண்ணுக்கு இலக்காந் தன்மை) என்னும் நான்கு குணங் களை, 'நிகரில் புகழாய், உலக மூன்று டையாய், என்னையாள்வானே, நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே' என்று முறையே நான்கு ஸம்போதனங் களுள்ள இரண்டு மூன்ருமடிகளால் அருளிச் செய்கிருர். 'புகலொன்றில்லா வடியேன் உன்னடிக் கீழ் அமர்ந்து புகுந்தேனே' என்ற நான்காமடியால் அப்படிப்பட்ட குணங்களையுடைய திரு வேங்கடமுடையானடிக்கீழ் அமைத்து புகுகின்ருர். (சரணுகதி செய்கிருர்.)

ஆத்மைக்ய ஜ்ஞானத்தால் மோக்ஷம் உண்டாகும் என்பர் அத்வைதிகள். எம்பெருமானையே தஞ்சமென்று பற் றிஞல் அவன், கைங்கர்யமாகிற மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அளிப்பான் என்பர் விசிஷ்டாத்வைதிகள். ஆக, பரமாசார்யரான நம்மாழ்வார் இத் திருமலையெம்பெருமானிடத்தில் மிக வும் ஈடுபட்டு, அகலகில்லேன், ஒழி வில் காலம் என்ற பாட்டுக்களிஞல் முறையே சரணுகதியையும் கைங்கர்ய ப்ரார்த்தனையையும் செய்து உபாயோ பேய நிஷ்கர்ஷம் செய்தருளிஞரா யிற்று.

இங்ஙனம் கைங்கர்யமே மோக்ஷ மென்பதும் அதற்கு எம்பெருமானே தஞ்சமென்பதும் ஆகிய, பகவத்ராமா நுஜ ஸித்தாந்த மென்று சொல்லப்படு கிற விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம் திருவேங்கடமுடையாஞேடுசேர்த்துச் சிறிது அனுபவிக்கப்பட்டது.

(இக்கட்டுரை 1958-ம் ஆண்டு ஏப்ரல் மாத தி. தி. தேவஸ்தான சமய இதழில் வெளியிடப்பட்டது.)





திருமலையில்

ஸ்ரீ வேங்கடேஸ்வரரின்

# பிரம்மோற்சவம்

[3-10-78 முதல் 11-10-78 வரை]

பக்தியின் வெளிப்பாடுகள் பல. பக்தி மேலீட்டால் இறைவனை நினைந்து உருகி பாடுவர் சிலர்; கவிதைகள் பல இயற்றுவர் சிலர். இறைவனையும் தன்னைப்போல் ஒருவனாகக் கொண்டு அவனுக்குப் பலவாறு அலங்காரம் புனைந்து அழகு பார்த்து விழாக் கொண்டாடுவர் பலர். இவ்வகையில்தான் உற்சவங்கள் தோன்றின. எல்லோர் உள்ளக்கோயில்களிலும் ஓர் சக்தி உறைந்து அவர்களை ஆட்கொள்கின்றது என்பதை இயற்கையிலேயே உணர்ந்தறிந்தான் மானிடன். இதுவே இறையுணர்வாகும். உடலால் தாங்கள் பல்வேறாக வேறுபட்டிருப்பினும், உள்ளத்தால் எல்லோரும் இவ்விறை உணர்வால் ஒன்று படுதலைக் கண்டான். அவ்விறைவன் மீது ஆழ்ந்த பக்தியும், முழு நம்பிக்கையும் கொண்டால் அவன்



துவஜாரோஹணம்

நம்மை இடரிலிருந்து காப்பான் என்பதைத் தங்கள் வாழ்க்கை அனுபவத்தால் கண்டறிந்த மனிதன் அப்பரம்பொருளுக்கு உருவம் கொடுத்து, கோயில் எழுப்பி அவன் அருளுள்ளத்தை நினைந்து மகிழ்ந்து, அவனுக்கே அடிமை செய்து அதில் இன்பம் காணும் வகையில் விழாக்கள் பல எடுப்பித்தான். இது அவ்விறைவனுக்கும் அவனுக்கும் உள்ள மானசீகமான ஆன்மீக உறவினை பலவாறு உறுதிப் படுத்தியது.

இவ்வகையில் கலியுக வரதனை அவ் ஏழு மலைகளில் நின்ற வண்ணம் அருள் புரியும் அவ் எல்லாம் வல்ல இறைவனுக்கும் அந்நாள் தொட்டு விழாக்கள் பல எடுத்தனர். இவ்வகையில் எடுக்கப்பட்ட விழாக்களில் மிகப் பழமையான விழா பிரம்மோற்சவமாகும். சாந்தரமானத்தைச் சார்ந்த ஆச்வயுஜ மாதத்தில் அதாவது தமிழ்மாதம் புரட்டாசி பிற்பகுதியில் நவராத்திரி விழாவின் போது இவ்விழா ஒன்பது நாட்களுக்கு நடைபெறும். மூன்று வருடங்களுக்கு ஒருமுறை அதிகமாதம் வருவதால், அப்போது பாத்ரபத மாதத்தில் அதாவது தமிழ் ஆவணி மாதத்தின் பிற்பகுதியில் இப்பிரம்மோற்சவம் இரண்டாவது முறையாகவும் நடத்தப்படும். அதுபோது வெள்ளி ரதத்தில் இறைவன் திருவீதி வலம் வருவார்.

ஒவ்வொரு நாளும் விழாக்கோலம் கொள்ளும் திருமலை, பிரம்மோற்சவத்தின் போது பக்திப் பெருங்கடலில் மூழ்கி, கோவிந்த கோஷத்தில் தோய்ந்து வேத மந்திரங்களில் கலந்து ஹோமப் புகையில் மறைந்து தன்னை மறந்து விடும். இத்தகு பெருமையுடன் விளங்கி, எண்ணற்ற பக்தர்களைக் கவரும் திருமலையில் நடக்கும் இப்பிரம்மோற்சவத்தின் ஆதி வரலாறு என்ன என்பதைச் சற்றே நோக்குவோம் :

## புராணச்சான்று :

வேங்கடாசல மஹாத்மியத்தில், பிரம்மன் தன் விருப்பப்படி, மற்றைய கடவுளர்கள், தேவர்கள் மனிதர்கள் முன்னிலையில் ஸ்ரீவேங்கடேஸ்வரருக்கு மிக ஆடம்பரமாக இப்பிரம்மோற்சவத்தை நடத்தியதாகக் கூறப்படுகின்றது. அன்று தொட்டு இன்று வரை அதன் பெருமை மங்காவண்ணம் இவ்விழா தொடர்ந்து கொண்டாடப்படுகின்றது. பிரம்மா இவ்விழாவினைச் சிறப்புற நடத்தியது பற்றிய முழுச் செய்தி, வேங்கடாசல மஹாத்மியத்தில் 19-வது அத்தியாயமான வராஹ புராணத்தில் காணக்கிடக்கின்றது. கலியுகத்தில் ஏற்பட்டுள்ள தீமைகளை அழித்து, உலகத்தைக் காப்பாற்ற பிரம்மன், முனிவர்கள் ஆகியோரின் வேண்டுகோளுக்கிணங்கி ஸ்ரீநிவாசன் இவ்வேழுமலைகளில் எழுந்தருளியதாகவும் அதனால் மகிழ்ச்சி கொண்டு பிரம்மன் இவ்விழாவை நடத்தியதாகவும் தெரிய வருகின்றது.

வரலாற்றுச் சான்றுகளின்படி இப்பிரம்மோற்சவத்தின் வரலாறுவது:

திருமலையின் கோயில் சுவர்களில் உள்ள பல கல்வெட்டுகளில்-பல காலத்தால் மறைந்தும் அழிந்தும் விட்டன-கோயிலின் முதல் பிராகாரத்தின் வடக்குச் சுவரில் உள்ள முக்கிய கல்வெட்டு கூறுவதாவது.

''ஸ்வஸ்தஸ்ரீ கொப்பாத்ரு பன் மற்கு யாண்டு கச-வது சக்தி விடங்கநாகிய ஸ்ரீகாட

பட்டிகள் பெறக்கடையார் மகள் சாமவை யாகிய காடவன் பெருந்தேவி, ஸ்ரீ வேங்கடத்து எழுந்தருளி நின்ற பெருமானடிகளுக்கு........ கொண்டருளி வெள்ளியால் எழுந்தருளுவித்த மணவாளப் பெருமாளுக்கு மார்கழி திருத்து வாதசிக்கு திருக்கொடி ஏற்றத்து திருமுளை அட்டி ஏழு நாள் திருவிழா இரண்டு பொழுதும் எழுந்தருளிவிப்பதற்கு வைத்த பூமி வெங்கடக் கொட்டத்து திருக்கட ஆர்நாட்டு திருச்சு கனூர் சபையார்க்கும் தேவர்க்கும் பொன் குடுத்து இறை இழித்தி.........சந்திராதித்த வரை செல்லதாக குடுத்தோம் சாமவையாகிய காடவன் பெருந்தேவியென்''

பல்லவ அரசைச் சார்ந்த சாமவை என்ற காடவன் பெருந்தேவி இளவரசி, இறைவனுக்கு மார்கழி மாதத்தில் ஏழு நாள் விழா எடுத்த தாகவும், மேலும் இறைவனுக்கு அவ்விழா நடத்தப்பொன்னும், பொருளும் கொடுத்த தாகவும், இவ்விழா, உலகில் சூரிய சந்திரர் இருக்கும் வரை நடத்தப்பட வேண்டும் என்று விரும்பியதாகவும் மேற்கண்ட குறிப்பிலிருந்து தெரிய வருகின்றது. இவ்விழாவிற்காகச் சாமவை, வெள்ளியில் மலைய குன்றபெருமாள் என்ற ஸ்ரீநிவாசரின் விக்ரகத்தைச் செய்து கோயிலில் பிரதிஷ்டை செய்ததாகவும், இறைவனுக்கு விலையுயர்ந்த கல் வைத்த கிரீடமும், மாலையும் மேலும் பல பொன் ஆபரணங்களையும் ஈந்ததாகவும் தெரிகின்றது. சாமவை நடத்திய இவ்விழா இரண்டாவதாகும். முதல் பிரம்மோற்சவ விழாவைப் புரட்டாசி மாதத்தில் நடத்தியதாகவும் மற்றொரு குறிப்பிலிருந்து அறிய முடிகின்றது. டாக்டர். எஸ். கிருஷ்ணசுவாமி ஐயங்கார் அவர்கள் தன்னுடைய 'திருப்பதி வரலாறு' (History of Tirupati) எனும் நூலில், சாமவையின் காலத்தைப் பல்லவ மன்னவனுன தண்டிவர்மன் காலத்துடன் இணைத்து நிறுவுவதால், சாமவையின் காலம் கி. பி. 7-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி அல்லது கி. பி. 8-ஆம் நூற்றுண்டின் முற்பகுதி என்றே துணியலாம்.

கி. பி. 13-ஆம் நூற்றுண்டைச் சார்ந்த கல்வெட்டுச் சான்றுகளிலிருந்து, கி. பி. 10-ஆம் நூற்றுண்டில், புரட்டாசி, மார்கழி மாதங்களில் மட்டுமின்றி ஆடி மாதத்திலும் திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்குத் 'திருக்கோடித் திருநாள்' என்ற பெயரில் மற்றுமொரு பிரம்மோற்சவம் நடந்து வந்ததாகத் தெரிய வருகின்றது. கி. பி. 12-ஆம் நூற்றுண்டில் ஸ்ரீ ராமானுஜரின் உத்தரவினுல், இறைவனுக்கு மற்றுமொரு பிரம்மோற்சவம் நடந்ததாக, இராமானுஜரின் பக்தரான அனந்தராயர் எழுதிய ''ஸ்ரீ வேங்கடாசல இதிஹாச மாலே'' எனும் நூலின் மூலம் அறிய ஏதுவாகின்றது. விஜய நகரப் பேரரசு காலத்தில் இரண்டாவது ஹரி ஹரர் எனும் அரசன் (1344-1404) முல்லே திருவேங்கட ஜீயர் என்பவரைக் கொண்டு, மாசி மாதத்தில் இறைவனுக்குத் திருமலையில் மற்றொரு புதிய பிரம்மோற்சவம் நடத்தியதாகச் சில சான்றுகளின் மூலம் அறிய முடிகின்றது. இவ்வாறுக கி.பி. 16-ஆம் நூற்றுண்டின் இறுதிவரை, மாதம் ஒன்றிற்கு

பெரிய சேஷவாகனம்



தேசம் சித்தூர் மாவட்ட கலெக்டர் திரு. ஜியார்ஜ் ஸ்ரேட்டான் என்பவருக்குச் கிழக்கிந்தியக் கம்பெனி, திருமலை கோயில் பற்றிய முழுச் செய்தியினைச் சேகரிக்குமாறு உத்திர விட்டது. 1803 ஆண்டைச் சார்ந்த அக்கலெக்டரின் செய்தித் தொகுப்பான ''சவால்-ஏ-ஜவாப்'' அப்போது நடந்த பிரம்மோற்சவத்தைப்பற்றிய முழு விவரங்களை நன்கு விளக்கியுள்ளது.

ஆகவே, இப்பிரம்மோற்சவம் எப்பொழுது யாரால் முதன்முதலாக ஆரம்பிக்கப்பட்டது என்பதைப் பற்றிய அதிகாரப் பூர்வமான சான்றுகள் கிடைக்கவில்லையாயினும், இவ் விழா பன்னெடுங் காலமாகக் கொண்டாடப்



ஹம்ஸ வாகனம்

ஒரு விழா வீதம், ஆனி, வைகாசி மாதங்களைத் தவிர்த்து, இறைவனுக்கு ஆண்டொன்றுக்குப் பத்து பிரம்மோற்சவங்கள் நடத்தப்பட்டு வந்தன என்று கூறலாம். காலப்போக்கில் மற்ற விழாக்கள் நிறுத்தப்பட்டு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் பிறந்த நாளான சிரவண தினத்தில் முடியும் புரட்டாசி மாதத்தில் மட்டும் பிரம்மோற்சவ விழா கொண்டாடப்பட்டது.

கி. பி. 19-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் இப்பிரம்மோற்சவம் எவ்வாறு கொண்டாடப் பட்டது என்ற செய்தியும் சேகரிக்கப்பட்டுள்ளது. இந்தியா ஆங்கிலேயரின் ஆட்சியில் இருந்தபோது, அப்போதைய ஆந்திரப் பிர

கல்ப வ்



பட்டுச் சுமார் 10 நூற்றுண்டுகளாக பக்தர் களை வெகுவாகக் கவர்ந்து வருகின்றது என் பது தெளிந்த உண்மை.

இப்பிரம்மோற்சவத்தின்போது இறைவன் அமர்ந்திருந்து திருவீதி வலம் வரும் வகையில் பல வாகனங்கள் பயன்படுத்தப்பட்டு வரு கின்றன. ஆனுல் இவ்வாகனங்கள் சில தத் துவக் கருத்துக்களை கொண்டு விளங்குகின்றன. யானை, குதிரை, பல்லாக்கு, ரதம் போன்ற வாகனங்கள் பயன்படுத்துவதற்குக் காரணம், இறைவன் ராஜாதிராஜன் என்பதைக் காட் டவே. இவ்வண்டம் முழுவதையும் தன் ஆட்சி யின் கீழ் கொண்டு அருளாட்சி புரியும் ஜகதீஸ் வரன் என்பதைக் கூறவேயாகும்.

ஷ வாகனம்





கருட வாகனம்

இப்பிரம்மோற்சவம் பத்து நாட்கள் கொண் டாடப்பட்டாலும், முதல் நாள் அவ்வளவாக, எவ்விதச் சிறப்புமின்றிக் கடந்து விடும். முதல் நாள் அங்குரார்ப்பணம் நாள் என்று அழைக்கப்படும். அன்றுமாலை விஷ்வச் சேனர் என்று அழைக்கப்படும் சேனை முதலியார் எழுந்தருளச் செய்வார். யாகசாலைக்கான புனித இடத்தைத் தேர்ந்தெடுக்க அன்று அவர் திருமலையின் நான்கு வீதிகளில் எழுந்தருளு வார். அவ்விடத்தில் ஒவ்வொரு நாளுக் குரிய ஹோமம் ஆரம்பிக்கப்படும். விழாவிற் குரிய எல்லா ஏற்பாடுகளையும் அவர் மேற் பார்வையிட்டு, அடுத்தநாள் ஆரம்பமாகும் விழாவிற்கு எல்லாக் கடவுளர்களையும் அவர் அழைப்பார். திருமலைராய மண்டபத்தில் அளிக்கப்படும் மரியாதையை ஏற்றுக் கொண்ட பின், அவர் அனந்தாழ்வார், கருடாழ்வார்,

சுதர்ஸனர் ஆகியோருடன் யாகசாலைக்குச் செல்வார்.

அடுத்தநாள் முதற்கொண்டு அடிப்படை விழா ஆரம்பமாகும். இதைக் குறிக்கும் வகையில் தூய ஆடையில் ஓவிய நுணுக்கங்களுடன் கருடனின் உருவம் தீட்டப்பட்ட கருடத் துவஜம் எனும் கொடி இறைவனின் கொடி மரத்தில் ஏற்றப்படும். இதுபோது விலையுயர்ந்த பொன்னாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு வஜ்ரகவசம் மலர்மாலைகள் அணியப் பெற்ற இறைவனின் உற்சவமூர்த்தியான ஸ்ரீ மலையப்பசுவாமி தன் இரு தேவியர்களான ஸ்ரீதேவி, பூதேவி ஆகியோருடன் தங்கத் திருச்சியில் (வாகனம்) திருமலைராய மண்டபத்திற்கு எழுந்தருளுவார். குறிப்பிட்ட நன் முகூர்த்தத்தில், வேதங்கள் முழங்க, நாதஸ்வர இன்னிசை எங்கும் பரவத் தலைமை அர்ச்சகரால் கருடத்வஜ கொடி கொடிமரத்தில் ஏற்றப்பட்டு, ஆகம விதிப்படி, அக்கொடி மரத்தில் சுற்றப்படும். இவ்விழா நன்முறையில் நடக்க தெய்வீகச் சிந்தனைக்கு எவ்வித இழுக்கும் நேரா வண்ணம் பாதுகாக்க எட்டுத் திக்குப் பாலகர்களுக்கும் உத்திரவிடப்படும். இவ்வாறு ஆரம்பிக்கப்படும் இவ்வொன்பது நாள் விழாவின் போது, இறைவன் பல்வேறு வாகனங்களில் காலையிலும், மாலையிலும் திருவீதி வலம் வருவார். இன்னின்ன நாட்களில் இந்தந்த வாகனங்களில் இறைவன் எழுந்தருளுவார் என்பதற்கு எவ்விதமான ஆகம விதிகளோ அல்லது வரையறைகளோ இல்லை. இப்போது உள்ள வாகன முறைகள், அவ்வப்போது வந்த அடியார்களின் விருப்புடன் செய்த ஏற்பாடுகளைப் பொறுத்தே வழக்கில் இருந்து வருகின்றன. பிரம்மோற்சவத்துடன் இணைந்த மற்றுமொரு குறிப்பிட்ட நிகழ்ச்சியும் கல்வெட்டுகளில் காணப்படுகின்றது. விழாச் செய்தியினை எங்கும் தெரிவிக்கும் வகையில், கோயில்முன் அதிர் வெடிகளை வெடிக்கும் பழக்கம் இருந்து வந்ததாகத் தெரிய வருகின்றது. கி. பி. 1583 ஆம் ஆண்டைச் சார்ந்த ஒரு கல்வெட்டின் மூலம் எட்டூர் திருமலை நம்பி குமாரதாத்தாச்சாரியார் என்பவர் 20 ரேகை பொன் செலவில் பெனுலிபாணம் என்ற ஒரு வெடியை நன்கொடையையாகக் கொடுத்ததாகத் தெரிய வருகின்றது. ஆனால் 'அதிர்வெடி' என்று எங்கும் குறிக்கப்படவில்லையாயினும் போர்ச்சுகீசியர், டச்சுக்காரர்கள், பிரஞ்சு நாட்டினர், ஆங்கிலேயர் ஆகியோர் இந்தியாவுக்கு வந்த பிறகுதான் இத்தகு வெடிகள் தென்னிந்தியாவில் வழக்கில் பரவலாக வந்தன.



சூர்யப் பிரபை

ஹனுமந்த வாகனம்





சந்திரப் பிரபை

இவ்விழாவை பிரம்மா ஆரம்பித்து வைத்த தாகப் புராணங்கள் செப்புவதால், அதன் அடையாளமாக, ஒவ்வொரு நாளின் வாகன உற்சவங்களின் போதும் பிரம்ம ரதம் எனும் ஒரு சிறு ரதம் (வெற்று ரதம்) வாகனங்களின் முன் இழுத்துச் செல்லப்படும். இதனுடைய மற்றொருப் பின்னணி என்னவெனின், இவ் விழாவின்போது பிரம்மன் திருமலையில் தங்கி, விழா நன்முறையில் நடக்க அவர் மேற் பார்வை புரிவதாகப் பொருள்படும். முதல் நாள் இரவின் போது மலையப்பசுவாமி தன் இருதேவியருடன் ஏழு தலைகளைக்கொண்ட பெரிய சேஷ வாகனத்தில் திருவலம் புரிவார்.

முதல் வாகனமான சேஷவாகனம், பரம பதத்தில் பள்ளி கொண்டிருக்கும் பரம்பொரு ளுக்கு எப்போதும் சேவை புரிந்து கொண் டிருக்கும் பாம்பின் நித்ய கைங்கர்ய பெருமை யினைப் பறைசாற்றும். இது மக்களுக்குத் தேவையான இடை விடா இறையுணர்வை உணர்த்தும்.

இரண்டாம் நாள் காலையில் நடத்தப்படும் சிறிய சேஷ வாகனத்தில் மலையப்பசுவாமி மட்டும் எழுந்தருளுவார். அன்று இரவு இறைவன், அன்ன வாகனமான ஹம்ஸ வாகனத்தில் திருவீதி வலம் புரிவார்.

முன்னொரு காலத்து, அரக்கன் ஒருவன் பிரம்மனிடமிருந்து வேதங்களை கவர்ந்து செல்ல, பின்னர் பிரம்மா ஆதிகேசவனிடம் முறையிட, அவருக்கு உதவும் வகையில் இறை வன் அன்னப்பறவை உருவம் கொண்டு அரக் கனை அழித்து வேதங்களை மீட்டுக் கொடுத் தான். இறைவன் தனக்குப் புரிந்த அருட் திறத்தை நினைவிற் கொண்டு பிரம்மா இவ் வன்ன வாகனத்தை வழக்கில் கொண்டதாகக் கூறப்படுகிறது. இது (அன்னப்பறவை வாக னம்) தன்னைச் சரணடைந்தார்க்கு விரைவில் அருள் தருவான் என்பதையும் வலிமையுடை யார்க்கும் பரம் பொருள்தான் கதி என்பதை யும் கூறுகின்றது. அன்று இறைவனை வழி பட்டால் அவர்களுடைய ஹிம்சைகள் (துன் பங்கள்) மறைந்து விடுமென்றும் நம்பப்படு கிறது. அன்று இறைவன் சரஸ்வதி அவ தாரம் புனைவார். மூன்றும் நாள் காலை இறை வன் சிம்ஹ வாகனத்திலும், இரவு முத்துக் களால் அலங்கரிக்கப்பட்ட முத்துப்பந்தலிலும் வலம் வருவார். மிருகங்களுக்கெல்லாம் தலை வனாகவும் மிருகங்களிடையே வீரம்பொருந்திய தாகவும் எப்படி சிங்கம் எனும் விலங்கு விளங்குகின்றதோ அதே போன்று உலக ஜீவ ராசிகளுக்கெல்லாம் தலைவனாகவும், எல்லா வற்றையும் விட சர்வ வல்லமைப்படைத்த வனாகவும் சாரங்கன் விளங்குகின்றான் என்

ரதோற்சவம்



பதைக் காட்டவே, உற்சவத்தின்போது சிம்ஹ வாகனம் பயன்படுத்தப்படுகிறது. மனிதர்களின் துன்பங்களைப் போக்கி, முழுவதுமாகத் தன்னைச் சரணடைந்தார்க்கு அருள்புரிய, இறைவன் இவ் ஏழுமலைகளில், தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி எழுந்தருளியுள்ளான். இதனைக் குறிக்கும் வகையில் நான்காம் நாள் காலை, கேட்டதைக் கொடுக்கும் கல்ப விருக்ஷம் வாகனத்தில் திருவீதிவலம் வருவார். அன்று இரவு தங்கத் தகடுகளால் வேயப்பட்ட விமானத்தைக் கொண்ட சர்வபூபால வாகனத்தை மேற்கொள்வார். இவ்வாகனம் 7 அடி உயரம் கொண்டு, தங்கத் தகடுகளால் போர்த்தப்பட்டிருக்கும். இரவில் விளக்குகளின் ஒளியால் இவ்வாகனம் பன்மடங்கு ஒளிர்விட, வாகனத்தின் நடுவில் மலையப்ப சுவாமி விலை

ஊஞ்சல் சேவை



யுயர்ந்த ஆபரணங்களை அணிந்து கொண்டு காட்சி தரும் அழகு கண்களுக்கு விருந்தாக மையும். அடுத்த நாள் காலை உற்சவத்தின் போது இறைவன் மோகினி அவதாரம் புனைவார். இதுபோது சரிகை வேலைப்பாடுடைய பட்டுத் துணியைப் புடவையாகக் கொண்டு சந்திரக்கல் பதித்த புல்லாக்கு என்ற மூக்குத்தியை அணிவார். காதுகளில் வைரத் தோடுகள் மின்ன, சங்கு, சக்கரம் ஏந்திய கைகளில் பொன் தாமரை மொட்டுக்கள் விளங்கும். இத்திருக் கோலத்தில் 'அவன்' ஆகிய இறைவன் 'அவள்' ஆக மாறி, முந்தி ஒரு நாள் தேவர்களுக்கு அமிர்தம் வழங்க, மோஹினி அவதாரத்தில் தோன்றிய இறைவனின் அழகிய கோலத்தில் மயங்கிய அரக்கர்களைப் போன்று, பெண் வேடம் புனைந்த இறைவனின் அலங்காரக் கவர்ச்சியில் பக்தர்கள் தங்களை மறந்து தெய்வ சிந்தனையில் தோய்வர் எனக்கூறின் அது மிகையாகாது. நேர்வழியில் நடப்பவர்க்கும் நற்செயலுக்கும், தீமையை அழிக்கவும் இறைவன் என்றும் துணையிருப்பான் என்பதைப் பக்தர்களுக்கு, மோகினி அவதாரம் புனையும் காட்சி கூறாமல் கூறுகின்றது. பிரம்மோற்சவ விழாவிற்கு மேலும் சிறப்பு சேர்க்கும் வகையில், அன்று இரவு இறைவன், தனக்குப் பிடித்த கருடவாகனத்தில் திருவீதிவலம் வருவார். அதுபோது திருமலை பக்திக் கோலம் பூண்டு, மக்கட் கடலாக விளங்கும். மொழி, இன வேறுபாடு இன்றி, மக்கள் அனைவரும் ஒன்று கலந்து, பக்தியின் விளிம்பிற்கே சென்று விடுவர். அன்று இரவு கருடவாகனத்தில் அமரும் மலையப்ப சுவாமி, அன்று மட்டும் அரிதாகப் பயன் படுத்தப்படும் லக்ஷ்மீஹாரம், மகர கண்டிகை என்னும் விலையுயர்ந்த ஆபரணங்களை அணிவார். மேற்கூறிய ஆபரணங்கள், பிரம்மோற்சவத்தின் கருட சேவையன்றுதான் கோயில் கருப்பக் கிரகத்திலிருந்து வெளிக் கொணரப்படும். அன்று அவ்வணிகளை மூலவரின் திருமேனியினின்று மிகவும் பயபக்தியுடன் கழற்றித் தங்கத்தட்டுகளில் வைத்து, மலையப்பசுவாமியின் மற்றைய அலங்காரங்கள் முடிந்த பிறகு, இன்னிசை தொடர அவற்றை வாகன மண்டபத்திற்குக் கொண்டு வருவர். இவ்வாறு அவ்வரிதான அணிகலன்களை அணிந்து, அருள்பொழியும் இறைவனை அன்று தரிசிப்பவர்கள் பேறு பெற்றவர்கள்தாம். கருடத்துவஜன் என்றழைக்கப்படும் மகாதேவனுக்கு, நல்லோரைக் காப்பாற்ற தான் விரைந்து செல்ல ஒரு வாகனமாக கருடன் விளங்கியது. ஆகவே இஃது இறைவனுக்கு உகந்ததால் கருட வாகனம் பயன் படுத்தப்படுகிறது.

(38-ம் பக்கம் பார்க்க)

# திருவேங்கடம்

'' ஆத்மீய நித்ய நிரவத்யா நிதாந்த
ஹ்ருத்ய
நித்யேதமான வபுருத்த மஹ:
ப்ரரோஹை:
மேகங்கரம் வ்ருஷகிரோ: சிகரம்
விதந்வந்
தேவோ தயா ஜலநிதிர் திசது
ஸ்ரீயம் ந:

''தன்னுடையதாய், எப்பொழுதும் குற்ற மில்லாததாய், மிகவும் அழகானதாய், சிறப்பித்து பிரகாசித்துக்



கொண்டிருக்கும் திருமேனியினின்றும் உண்டாயிருக்கிற காந்தியின் முனைக் குருத்துகளால் திருமலையினுடைய சிகரத்தை, மேகத்தை உண்டாக்குவதாகச் செய்து கொண்டிருக்கிறவனும், கருணைக்கடலாயுமிருச்சிற ஸ்ரீநிவாஸன் நமக்கு ஞான செல்வத்தைக் கொடுப்பானாக.''

சிலப்பதிகாரத்தில் திருவேங்கடம் :

''நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்'' என்று மகாகவி பாரதியாரால் சிறப்பிக்கப் படுவதும், ஐம்பெருங் காவியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரம், மதுரைக்காண்டம், '' காடு காண் காதை'' (41-51 வரிகள்) யில் திருவேங்கடமுடையானின் நின்ற வண்ணம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

அதுபின் வருமாறு:

'' வீங்குநீ ரருவி வேங்கட மென்னும்
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை
..........................
........................
பொலம்பூ வாடையிற் பொலிந்து
தோன்றிய
செங்க ணெடியோன் நின்ற
வண்ணமும்''

திருவேங்கடமுடையான் சங்கோடு அணி ஆழி நீங்கி மீண்டும் பெற்றமை :

தொண்டைமான் சக்கரவர்த்தி க்ஷத்திரியனாயினும் தவவொழுக்கத்திற் சிறந்து முனிவரை யொக்கும் பெருமை வாய்ந்து திருவேங்கடமுடையான் பக்கல் பக்தி மேலிட்டு அப்பெருமானை எப்பொழுதும் சேவித்துக்கொண்டு திருமலையிலேயே வாசஞ்செய்திருத்தலையுணர்ந்த பகையரசர்கள் அவனது நாட்டைக் கைக்கொள்ள, தொண்டைமான் அதனைத் திருவேங்கடமுடையான் சன்னதியில் விண்ணப்பஞ் செய்து வணங்கி நிற்க, பெருமான் தனது திவ்யாயுதங்களாகிய சங்க சக்ரங்களைக் கொடுத்து 'இவற்றைக் கொண்டு நீ பகையரசரைத் தவறாது வென்றிடுக' என்று சொல்லியருள, தொண்டைமான் அங்ஙனமே பகை வென்று அரசு பெற்றனனென்ற வரலாற்றை, (திருவேங்கடத்தந்தாதி 53-ம் பாட்டு) வேங்கடாசல மஹாத்மியத்திற் காணலாம்.

ஸ்ரீநிவாஸன் தனது சங்க சக்கரங்களைத் தொண்டைமான் சக்கரவர்த்திக்குக் கொடுத்துவிட்டதாற் சில காலம் திருக்கைகளில் திருவாழி திருச்சங்கு இன்றி யிருந்தமை - முன்னொரு காலத்தில் திருவேங்கடமுடையான் தன்மெய்த்தொண்டனை தொண்டைமான் சக்கரவர்த்திக்கு அரிய பகைவர்களை வெல்லுதற்பொருட்டுத்தனது பகைவர்களைத்தந்தருளி அதற்கு அடையாளமாகப் பின்பு அவனது வேண்டுகோளால் அவற்றை அங்கு விக்கிரக ரூபத்தில் வெளிப்படையாகக் கொள்ளாதிருந்தனன் என்பதும்; ஸ்ரீபாஷ்யகாரர் சிஷ்யர்களுடன் திவ்யதேச யாத்திரையிலே திருமலைக்கு எழுந்தருளினவளவில், அங்கு திருவேங்கடமுடையானைத் தங்கள் தெய்வமென்று சைவர்கள் வழக்குப்பேச, உடையவரும் 'சூழ டமருகங்களையும் ஸ்ரீ சங்க சக்கரங்களையும் எம்பெருமான் திருமுன்னர் வைப்பது: அவைகளில் அப்பெருமான் எவற்றைத் தரித்தருள்

திரு. டி. எஸ். அக்காரகனி அய்யங்கார்.

கின்றனனோ, அது கொண்டு அவனை இன்ன கடவுளென்று நிச்சயித்துக் கொள்வது' என்று அருளிச்செய்ய, அந்த இராமானுசன் வார்த்தைக்கு அனைவரும் சம்மதித்து அங்ஙனமே செய்ய, ஸ்ரீநிவாஸன் இளையாழ்வார் திருவுள்ளத்தின்படி திருவாழி திருச்சங்கு தரித்தபடியைக்கண்டு எல்லாரும் ஆனந்தித்துத் திருவேங்கடமுடையானைத் திருமாலென்றே நிச்சயித்தனர் என்பதும் அறியத்தக்கது.

திருமலைக்கு 'சேஷகிரி' அல்லது 'சேஷாத்திரி' எனப்பெயர் வந்ததன் காரணம் :

பரமபத நாதனது கட்டளையின்படி அவனுக்குப் பல வகைக் கைங்கரியங்களைச் செய்யும் ஆதிசேஷன் அப்பெருமான் இனிது எழுந்தருளி யிருத்தற்கு

திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகள்-மானுஷம் ஒழிந்த மற்றை மூவகையர்ச்சையினைச் சேர்ந்தவை யென்றும், மூவகை அர்ச்சையிற் சேர்ந்த திருப்பதிகளுள்ளுஞ் சில - ஆழ்வார்களது மங்களா சாசனம் பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகளிற் சேர்ந்தனவாகாமல், புராணஸ்தலங்களென்று சிறப்பித்துக் கூறப்படும் எனவும் அறிக.

திருமாலின் ஐவகை நிலைகளினுள்ளும் 'அர்ச்சாவதாரமே' நமக்கு எளியது என்பது :

1. பரத்வமும் வ்யூஹமும் தேசத்தினால் சேய்மையனவாதலால் அவைகள் காணமுடியாதனவாம்.

2. விபவமோ தேசத்தினற் சேய்மையதன்றாயினும் அக்காலத்தார்க்கன்றிப் பிற்பட்டாரான நம்மாற் காண்பதற்கில்லை.

3. அந்தர்யாமித்வமோ தேசகாலமிரண்டினாலும் சேய்மையதன்றாயினும் ஞானதிருஷ்டியினாலன்றி வேறு வகையாற்காண இயலாது. ஆகையால் அஜ்ஞானரான நமக்கு அதுவும் பயனற்றதேயாம். எனவே ஒருவகையாலும் அருமைப்பாடின்றி ஆங்காங்குக் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கின்ற 'அர்ச்சையே' நமக்கெல்லாம் எளிதில் அடைந்து ஈடேறுதற்கு எளியது.

அர்ச்சாவதாரத்தின் சிறப்பு :—எம்பெருமான் வ்யூகம் விபவம் முதலிய நிலைகளை மேற்கொண்டும் அவை பயனில்லாதல்பற்றி, அர்ச்சாவதாரத்தை மேற்கொண்டு உலகத்து உயிர்களை அடிமை கொள்கின்றனர் என்பது நூல் துணிபு. ''பூர்த்தியுள்ளதும் அர்ச்சாவதாரத்திலே; ஆழ்வார்கள் பல விடங்களில் ப்ரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே'' பூர்ணமென்மையாலே எல்லாக் குணங்களும் புஷ்கலங்கள். ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான ஸௌலப்யாதிகள் இருட்டறையில் விளக்குப் போலே பிரகாசிப்பது இங்கே. பூர்த்தியையும் ஸ்வாதந்தரியத்தையும் குலைத்துக் கொண்டு தன்னை அநாதரிக்கிறவர்களைத் தான் ஆதரித்து நிற்கிற இடம். ''பூகத ஜலம் போலே அந்தர்யாமித்வம் ஆவரண ஜலம் போலே பரத்வம்; பாற்கடல் போலே வ்யூஹம்; பெருக்காறுபோலே விபவங்கள். அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம். இதுதான் சாஸ்திரங்களிலே திருத்த வொண்ணுதே விஷயாந்தரங்களிலே மண்டிவிமுகராய்ப் போகுஞ் சேதநர்க்கு வைமுக்யத்தை மாற்றி ருசியை விளைக்கக் கடவதாய், ருசி பிறந்தால் உபாயமாய், உபாய பரிக்ரஹம் பண்ணினால் போக்யமாய் இருக்கும்'' என்பது ஸ்ரீ வசன பூஷணம்.

எம்பெருமான் நான்கு யுகங்களிலும் நான்கு நிறமுடையனாயிருக்கின்ற படியை விளக்குவன :

1. ''க்ருதயுகத்தில் வந்தால் க்ருதயுக புருஷர்கள் ஸத்வோத்தர ராகையாலே அவர்களுடைய ருசிக்கு அநுகுணமாகச் சுக்லவர்ணமான வடிவையுடையனா யிருக்கும்.''

2. ''திரேதாயுகத்தில் வந்தால் சிவந்த வடிவையுடைய னாயிருக்கும்; அக்காலத்திலே புருஷர்கள் ரஜ: ப்ரசுரராகையாலே சிவப்பிலே யாயிற்று ருசியுண்டாயிருப்பது; அந்த ருசிக்கு அநுகுணமாகச் சிவந்த வடிவைக் கொண்டு முகங்காட்டும்.''

3. ''துவாபர யுகத்திலுள்ளார் ரஜஸ்தமோ மிஸ்ரரா யிருக்கையாலே அவர்களுடைய ருசிக்கு அநுகுணமாகச் சிவப்பு மன்றியிலே நீலமுமன்றியிலே பாசியினுடைய புறத்திற் பசுமை போலே மிஸ்ரஹரமான திருமேனியை யுடையனாயிருக்கும்.''

4. ''கலிகாலத்தில் தன் பக்கத்தில் அபிமுகராய் ஒரு வர்ண விசேஷத்திலே ருசி பண்ணுவார் இல்லாமையாலே ஸ்வாபாவிக வடிவுதன்னை (கருநிறத்தைக்) கொண்டிருக்கும்.''

ஆழ்வார் : பகவானுடைய திவ்விய மங்கள குணங்களாகிய அமுத வெள்ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திருப்பவராதலால் இவர்களுக்கு 'ஆழ்வார்' என்று திருநாமம். ஸ்ரீ வைஷ்ணவ மதத்திற் சிறந்த மெய்யடியார்களென்று கொண்டாடப்படுகின்ற ஆழ்வார்கள் பன்னிருவர்.

அவராவார் : பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், (அவரது சிஷ்யரான) மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், (அவர் வளர்த்த மகளான) ஆண்டாள், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என இவர். இவர்களில் தொண்டரடிப் பொடியாழ்வாரும், மதுரகவியாழ்வாரும் தவிர்ந்த மற்றைப்பதின்மரும் திருவேங்கடத்தைப் பாடினரென அறிக.

முதலாழ்வார்கள் : பொய்கையாழ்வார். பூதத்தாழ்வார், பேயாழ்வார்-இவர்கள் மூவரும் மற்றையாழ்வார்களுக்கெல்லாம் முன்னே திருவவதரித்ததனாலும், பின்பு உண்டாகும் பிரபந்தங்களுக் கெல்லாம் இலக்கணமாம்படி ஆதியில் திருவந்தாதி திவ்வியப் பிரபந்தங்களைத் திருவாய்மலர்ந்தருளியதனாலும் முதலாழ்வார்களென்று பெயர் பெற்றனர். (மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து, நற்றமிழால் நூல் செய்து நாட்டையுய்த்த - பெற்றிமையோரென்று முதலாழ்வார்களென்னும் பெரியவர்க்கு, நின்றதுலகத்தே நிகழ்ந்தது—என உபதேச ரத்தினமாலையையுங் காண்க.) இம்மூவரும் நூறு நூறு வெண்பாக்களினற் பாடிய திவ்யப் பிரபந்தங்கள் முறையே முதல் திருவந்தாதி, இரண்டாந்திருவந்தாதி, மூன்றாந் திருவந்தாதி யெனப் பெயர் பெறும்.

முதலாழ்வார்கள் வெண்பாவை யாதரித்தனர். அன்றியும் அவர்கள் நூற்றெட்டுத் திருப்பதிகளுள்ளும் திருவேங்கடத்தை மிகுதியும் பாராட்டிக் கூறியமையுங் காண்க.

(இக்கட்டுரை 1968-ம் ஆண்டு மார்ச் மாத தி. தி. தேவஸ்தான சமய இதழில் வெளியிடப்பட்டது.)



12-ம் பக்கத் தொடர்ச்சி)

*இது மட்டுமா? அருவி பெருகிவரும் கபிலதீர்த்தம், பாண்டவ தீர்த்தம், தும்புருதீர்த்தம் முதலான புண்ணிய தீர்த்தங்களில் தேவர்கள் தேவியருடன் வந்து நீராடுகிறார்களாம். திருவேங்கடமுடையான்மீது கொண்ட பக்திக் காதலால் வினையை வென்றவர்கள் இவர்களெல்லாம்.*

*இந்த நீராட்டக் காட்சியை இதோ பார்க்கிறோம்.*

**முனைவரும், மறைவ லோரும்,**
**முந்தைநாள் சிந்தை மூண்ட**
**வினைவரும் நெறியை மாற்றும்**
**மெய்யுணர்வோரும், விண்ணோர்**
**எனைவரும், அமரர் மாதர்**
**யாவரும், சித்தர் என்போர்**
**அனைவரும் அருவி நன்னீர்**
**நாளும் வந்(து) ஆடுகின்றார்.**

*(முனைவரும் - முனிவரும். மறைவலோரும் - வேதம் வல்லவர்களும். முந்தை நாள் சிந்தை மூண்ட வினைவரும் நெறியை மாற்றும் மெய் உணர்வோரும் - முன்னாளில் மனம் மூண்டு செய்த தீவினை நெறியைப் புரட்சிகரமாக மாற்றிக்கொள்ளுமாறு ஸத்தியத்தை உணர்ந்து கொண்டவர்களும். விண்ணோர் ஏனைவரும் - தேவர்கள் எல்லாரும். அமரர் மாதர் - தெய்வப் பெண்கள்.)*

*சுக்கிரீவன் திருமலையிலுள்ள பாகவதர்களைக் குறித்துக் கூறியதெல்லாம் உண்மைதான். 'இவர்கள் பக்தி வாயிலாக முக்தி-ஏணியில் விரைந்து கொண்டிருப்பவர்களே!' என்பதை அனுமன் முதலான வானர வீரர்கள் தெளிவாய்த் தெரிந்து கொள்கிறார்கள்.*

**விலங்கும் வீடுறு**
**கின்றன, மெய்ந்நெறிப்**
**புலன்கொள் வார்கட்(கு)**
**அனையது பொய்க்குமோ?**

*(விலங்கும்-நாற்கால் பிராணிகளும். வீடு உறுகின்றன - மோட்சம் அடைகின்றன என்றால், மெய்ந்நெறிப் புலன் கொள்வார்கட்கு - ஸத்திய வழியில் நடக்கும் தத்துவ ஞானிகளுக்கு. அனையது பொய்க்குமோ - அந்த முக்தியானது பொய்த்துப் போகுமோ.)*

*ஆனால் இறைவனிடம் வீடும் வேண்டாத ஞான வீரர்கள் இப்பெரியோர். பக்திச் சுவைக்கும் கைங்கரியச் சுவைக்கும் மேலாக வேறொரு சுவை உண்டென்று கருதாதவர்கள்.*

**இச்சுவை தவிர யான்போய்**
**இந்திர லோகம் ஆளும**
**அச்சுவை பெறினும் வேண்டேன்!**

*என்ற தொண்டரடிப் பொடியாழ்வாரின் மன நிலை வாய்க்கப் பெற்றவர்கள். திருவேங்கடமுடையானின் திருவடிகளே தஞ்சம் என்றிருப்பார்கள்.*

*ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் தம் திருவடிகளை வேங்கடமலையில் பதிய வைத்திருக்கிறார். 'மலை குனிய நிற்கும் பெருமாள்' ஞான மலைகளும் பணிய நிற்கும் பெருமாளல்லவா?*

**வலங்கொள் நேமி**
**மழைநிற வானவன்**
**இலங்கு தாளிணை**
**தாங்கிய அம்மலை**

*(வலங்கொள் நேமி - வலது கையில் சக்ராயுதமுள்ள. மழைநிற வானவன்- மழை மேகம் போன்ற குளிர்ந்த வசீகர நிறத்தையுடைய கடவுளாகிய ஸ்ரீ வேங்கடாசலபதி. இலங்கு தாள் இணை - விளங்குகின்ற திருவடிகள் இரண்டையும்.)*

*என்று கவிக்கூற்றாக வருவது கவனத்திற்குரியது. 'கண்ணன் அடியிணை எமக்குக் காட்டும் வெற்பு' என்று ஸ்ரீ வேதாந்ததேசிகரும் கூறியிருக்கிறாரல்லவா?*

*'இந்தப் பெருமாளின் மகிமையால் வேங்கட மலையிலுள்ள மிருகங்கள் முதலியனவும் மோட்சத்தை அடையுமென்றால், இம்மலையில் வசிக்கும் ஞான மலைகளும் குண மலைகளுமான பெரியோருக்கு முக்தி பொய்த்துப் போகுமா?' என்று இவ்வாறு தம்மைத் தாமே வினவிக்கொண்டு வானர வீரர்கள் தங்கள் மகாராஜாவின் அபிப்பிராயம் சரிதான் என்று திருப்தி அடைகிறார்கள்.*

*இப்படி எண்ணமிட்டவர்களாய் அந்த ஞான வீரர்களை இந்த வானர வீரர்கள் துணிந்து நெருங்கி அவர்கள் அடிகளில் முடிபட வணங்குகிறார்கள்;*

**ஆய குன்றினை**
**எய்தி, அருந்தவம்**
**மேய செல்வரை**
**மேவினார், மெய்ந்நெறி**
**நாய கன்தனை**
**நாளும் வணங்கிய**
**தூய நற்றவர்**
**பாதங்கள் சூடினார்.**

---

## அல்லிக் கமலக்கண்ணன்

*ஆழ்வார்களின் பாடல்களில் எம்பெருமானை* **"அல்லிக் கமலக்கண்ணன்"** *என்று சாதிக்கிறார். அல்லியோ இரவில் சந்திரனைப் பார்த்து மலரும். கமலமோ பகலில் சூரியனைக் கண்டு மலரும். இப்படி இரவிலும், பகலிலும் மலரும் மலர்களை இரு கண்களுக்கு உபமானமாகச் சொல்வது எப்படிப் பொருந்தும் என்று ஓர் கேள்வி எழுகிறது. இதன் ஆழ்ந்த கருத்தை மேலும் விளக்குகிறார். பகவானுக்கு வலக்கண் பக்கம் சுழல்வது சுதர்சனச் சக்கரம். சுதர்சனம் ஆயிரம் சூரியர்களுக்கு நிகராக இருக்கிறது. இடக்கண் பக்கம் இருப்பது சங்கம். தண்மதியை ஒத்து மிளிர்கிறது. வலக்கண் சக்கிராயுதத்தையும் இடக்கண் சங்கத்தையும் நோக்குவதால் வலக்கண்ணை கமலத்திற்கும் இடக்கண்ணை அல்லிக்கும் "அல்லிக் கமலக் கண்ணன்" என்று ஆழ்வார்கள் அபூர்வ உபமானமாக சாதித்தருளுகிறார்.*

*காரைக்குடி ராமாயண உபந்யாசத்தில் திருமலாச்சாரியார்.*

[தகவல்; எஸ். கஸ்தூரி ரங்கன் — சிவகங்கை.]

---

(ஆய - அவ்வாறாகிய. குன்றினை - (இங்கே) திருவேங்கடமலையை. எய்தி - அடைந்து. அருந்தவம் மேய செல்வரை - செய்தற்கு அரிய தவம் பொருந்திய அந்த உண்மைத் திருவாளர்களை. மேவினர் - அடைந்தவர்களாய். மெய்ந்நெறி நாயகன்தனை - சத்தியநெறியின் தலைவனாகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமானை. நாளும் வணங்கிய - எந்நாளும் வணங்கப்பெற்ற தூய நற்றவர் - தூய்மையான சிறந்த தவத்தையுடைய அப்பெரியோர்களின். பாதங்கள் சூடினார் - திருவடி மலர்களைத் தங்கள் முடியில் சூட்டிக்கொண்டதுபோல் வணங்கினார்கள்.)

இத்தகைய பாக்கியவான்களைக் கண்டதும் வானர வீரர்கள் தம்மை அறியாமலே விரைந்துபோய்த் தரிசிக்கிறார்கள், வணங்குகிறார்கள். ஸ்ரீ வேங்கடேசப் பெருமானை ஒவ்வொரு நாளும் வழிபடுவதையே தூய நற்றவமாகவும், அந்த அருந்தவத்தையே தனிப்பெருஞ் செல்வமாகவும் பெற்றிருப்பவர்கள் இந்த பரமபாகவதர்கள். வேறு பிரயோஜனங்களை விரும்புகிறவரல்லர்; வேறு உபாயங்களையோ, சித்திகளையோ, சக்திகளையோ இவர்கள் அடைய விரும்புவதில்லை.

முத்துக் குளிக்கும் துறையிலே வெண் முத்தைப் பசிதீர நெல்லுக்கு மாற்றி கொள்ளுவோருண்டு. விலையறியும் செட்டிமார் அதே முத்தைப் பெருவிலைக்கு விற்பர். இத்தகைய வாணிபத்தைத் திருமலைமீதுள்ள பாகவதர்கள் செய்வதில்லை. இவர்கள் பக்தி-வணிகர் அல்லர். 'இலங்கு தாளிணை' வணங்குவதும், அந்த 'மெய்ந்நெறி' நின்று பணிபுரிவதுமே பரமபுருஷார்த்தமென்று நம்புகிறவர்கள்.

இத்தகைய பாகவதர்களை வழிபட்டபின், 'மெய்ந்நெறி நாயக'னாகிய பகவானையும் வானர வீரர்கள் 'தரிசித்தார்கள்; 'இலங்கு தாளிணை' வணங்கினார்கள் என்பது குறிப்பு.

இந்தவிதமாக மன அமைதியும் புதிய சக்தியும் பக்தி விசுவாசத்தால் பெற்று உத்ஸாகமாய்ச் சீதையைத் தேடப் போகிறார்கள். இது கம்பன் சொல்லும் கதை.

## கம்பன் கண்ட திருமலை

இப்படித் திருப்பதி மாகாத்மியம் பேசும் மகாகவி திருப்பதி யாத்திரை செய்து தன் ஜீவயாத்ரா மார்க்கத்தையும் பண்படுத்தியிருக்கவேண்டும் என்று ஊகிப்பது பொருத்தமானதே. தான்பிறந்த சோழவளநாட்டிலிருந்து புறப்பட்டு நாடோடியாகக் கம்பன் தென்னிந்தியாவின் பல பகுதிகளிலும் சஞ்சரித்திருக்கிறான் என்று ஊகிக்கலாம். இந்த யாத்திரைகளில் திருப்பதி யாத்திரை அதி முக்கியமாகத் தோன்றியிருக்கவும் கூடும்.

காவேரிதீரம் முழுவதும் செந்நெல்லும் கரும்பும் கமுகும் போவதற்கும் வழி கிடையாதபடி நெருங்கி வழிப்போக்கர்களுக்குத் துன்பம் செய்வதாக அந்த நாட்டின் வளத்தைக் கவிஞன் வருணித்திருக்கிறான். அத்தகைய வழிபிடித்துச் சோழவள நாட்டைக் கடந்து தொண்டை நாட்டின் வழியாகக் கவிஞன் திருமலையை அடைந்திருக்க வேண்டும்.

தொண்டை மண்டலத்திலே, ஸம்ஸ்கிருதம் தமிழ் என்ற இரு மொழிப் புலவர்களும் கலந்து கலைச்செல்வத்தைப் பல்லவர் காலத்திலேயே பெருக்கிவந்தனர் என்பது சரித்திரக் கூற்று. கம்பனும், இரு மொழிகளையும் பட்சபாதமில்லாது கற்றுத் தேர்ச்சி பெற்றிருந்த கலைச் செல்வர்களைக் குறித்துப் பிரஸ்தாபிக்கிறான். தொண்டை மண்டலத்தில் தானே முதன் முதல் பொய்கையாழ்வார், 'மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி' உபய வேதாந்தத் திருவிளக்கினை ஏற்றி வைத்தார். இந்தத் திருவிளக்கல்லவா கம்பன் காலத்திற்குச் சற்று முற்பட்டு மறைந்த ஸ்ரீ இராமானுஜருக்கும் ஒளிகாட்டி நெறிகாட்டியது?

தொண்டைநாட்டுப் பெரும் புலவர்களோடு உரையாடியும், அங்குள்ள வள்ளல்களால் ஆதரிக்கப்பெற்றும், கம்பன் தொண்டை மண்டலத்தைக் கடந்து சென்றிருக்க வேண்டும்.

திருப்பதி மலை கட்புலனானதும் கம்பனுடைய பக்திக் கண்களுக்கு அது 'புகழ் பொதிந்த மெய்யேபோல்' காட்சி வழங்கியிருக்க வேண்டும். கம்பனுக்குக் காவிய நாயகன், வேதம் கூறும் 'மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள் வில்லும் தாங்கி' வந்த திருக்கோலம் தானே. அதே மெய்ப்பொருளைச் சயனத் திருக்கோலத்திலே திருவரங்கத்தில் அடிக்கடி தரிசித்திருக்கும் கவிஞன் நின்ற திருக்கோலத்தில் திருமலைமீது சேவிக்க ஆசைப்பட்டுத் தானே விரைந்து கொண்டிருக்கிறான்.

திருமலைமீது கைங்கரியம் செய்து கொண்டிருந்த பாகவதர்களையும் கம்பன் சந்தித்திருக்க வேண்டும். அந்த நாளில் அங்குள்ள ஸ்ரீ இராமானுஜ ஸம்பிரதாய பாகவதர்களைக் கண்டு களித்திருக்கவும்கூடும்.

கம்பன் காலத்திலும் திருப்பதி அதிகமாய்க் காடுகள் அடர்ந்த பிரதேசம்தான். அக்காடுகளையும் குன்றுகளையும் கண்ணுற்றுக் கவியுள்ளம் ஓங்கிக் களிப்புற்றிருக்க வேண்டும். மலையருவிகளையும் பார்த்துப் பரவசமாயிருக்கவேண்டும். அந்த அருவிகளில் நீராடியும், 'நிர்மலன் ஆனேம்' என்று உவகையுற்றிருக்க வேண்டும். கபிலதீர்த்தம், கோனேரி, ஆகாச கங்கை, பாபவிநாசம் முதலான தீர்த்தங்களிலும் கம்பனும் கவியுள்ளமும் ஒருங்கே ஆடிக்களித்தனர் என்று கருதுவதும் பொருந்துவதே.

ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளின் திருவடிகளைத் தாங்கி நிற்கும் திருமலையில் ஏறிச் சென்று,

வலங்கொள் நேமி
மழைநிற வானவன்

என்று தான் வருணிக்கும் அப்பெருமானைக் கம்பன் பரம பக்தியுடனும் கவியுள்ளத்துடனும்தரிசனம் செய்து பேறு பெற்றிருக்கிருனென்று கருதலாம்.

நன்னிற மேகம்
நின்றது போல

என்றும்,

பகையணங்(கு) ஆழியும்

என்றும் வருகின்ற சிலப்பதிகார வருணனை இங்கே நினைவிற்கு வருகிறது. அந்த நாடகக் காப்பியத்திலே இளங்கோவடிகள் வருணிக்கும் அதே நின்ற திருக்கோலத்தை அதே கவிமலர் கொண்டு வழிபடுகிறது கம்பனின் கவியுள்ளம்.

ஸ்ரீ வேங்கடேசப் பெருமானை 'மெய்ந்நெறி நாயகன்' என்றும் கம்பன் குறிப்பிடுகின்றானல்லவா? 'தீதில் நன்னெறி' என்று ஆழ்வார் குறிப்பிடுவதைக் கம்பன் 'மெய்ந்நெறி' என்று குறிப்பிடுவதாக ஊகிக்கலாம். எனினும், இந்த 'மெய்ந்நெறி'யில் இந்து சமய உட்பிரிவுகளுக்கெல்லாம் பொதுவான—சத்தியத்தை அடிப்படையாகக் கொண்ட—கொள்கைகள் அடங்கும் என்று கருதுவதும் தவறுகாது.

திருவேங்கடமுடையானது 'மெய்ந்நெறி' முத்தி நெறி மட்டுமன்று. மூப்பு, பிணி முதலான துன்பங்களுக்கெல்லாம் அருமருந்தாகி இம்மையிலே நல்வாழ்வு அளிப்பதும் இந்த 'மெய்ந்நெறி' என்பதாக ஆழ்வார்களின் தலைவராகிய நம்மாழ்வாரே அருளிச்செய்வர்.

காதல் இற்றுச் சார்ந்தவர்க்கும்
காமியத்தைச் சார்ந்தவர்க்கும்
வேதனைக்கூற் றைத்தவிர்க்கும்
வேங்கடமே !

என்று திவ்ய கவி அழகிய மணவாளதாசர், திருவேங்கடத்தைப் பற்றிய ஆழ்வார்களின் கொள்கையைச் சுருங்கக்கூறித் தெளிவுபடுத்தியுள்ளார்.

'ஒன்றுமே வேண்டாது உலகனைத்தும் ஆளுவர் காண்' என்ற நிலையைத் திருவேங்கடமுடையானின் திருவருளால் பரம பாகவதர்கள் எய்தப் பெறுவர் என்பது உண்மைதான். சாதாரண மக்களும் திருப்பதி யாத்திரையால் தங்கள் வேதனைகளைப் போக்கிக் கொண்டு, வேண்டும் பிரயோஜனங்களைப் பெறுகின்றுர் என்பதும் உண்மைதான்; 'மெய்ந்நெறி' தான். ஆகவேதான், திருமலையில் தரிசனம் செய்துகொண்ட பின் அனுமன் கடல் தாண்டிச் சீதையைக் கண்டு கொள்ளும் பாக்கியத்தைப் பெற்றுன் என்ற போக்கில் அமைந்திருக்கிறது கம்பன் கதை.

(இக்கட்டுரை 1953-ம் ஆண்டு செப்டம்பர் தி. தி. தேவஸ்தான சமய மாத இதழில் வெளியிடப்பட்டது.)

---

# ஓடி வா !

அன்பு தாசன்



திருமலையானே ! தேவநாயகனே !
திருமகள் நாதனே ! வேதனே !
ஒரு முறை ஒரு முறை ஓரே முறை
உன்னிடம் மனக்குறை உரைப்பேன் !
திருமுறை போற்றும் பச்சை மேனியா !
தேடி வரும் ஒரு குரல் ! கேட்டதுமே
வருவதெல்லாம் நலம்...வாழ்வு வளம்
மாறிட வேண்டும் மாமலையோனே !

பாலசுப்பிரமணியெனும்; செல்வப்
பசுங்கதிர் நெஞ்சன் ! தெய்வீகன் !
மாலவா ! உன்னிடம் வாழ்விலே புதியதோர்
மறுமலர்ச்சி மணம் வேண்டியபடியே
காலையும் மாலையும் கனிந்துருகுதல்
காதில் விழுந்தும் கேளாததேனோ ?
மாலையும் கழுத்துமாய் மாறவும்; நலம் பல
வாழ்விலே நித்தமும் சேரவும் அருள் புரி...!

இல்லத்தில் இனிய தென்றலே வீசவும்
இதயத்தார் அனைவரும் உண்மையே பேசவும்
செல்லும் வழிகளில் வெற்றியே சுற்றவும்
சிறப்பும் செல்வமும் வற்றுது வளரவும்
அல்லல்கள் அனைத்துமே அடியோடு ஒழியவும்
அன்பர்கள் நண்பர்கள் உயரவும் உயரவும்
சொல்லரிய சக்தி சுடர் வீசும் வேங்கடவா
சூட்டினேன் பாமாலை ! ஓடிவா ! வா ! வா !



### திருமலை செல்லும் யாத்திரிகர் கவனிக்க:

# திருமலையிலும் திருப்பதியிலும் தங்கும் வசதிகள்

அநேகத் தர்ம சத்திரங்களை (தர்மசாலை)த் திருப்பதியிலும் திருமலையிலும். திருமலை-திருப்பதி தேவஸ்தானம கட்டியிருக்கிறது.

திருமலையில் நூற்றுக் கணக்கான அழகிய குடில்கள் (காட்டேஜ்) மிகக் குறைந்த வாடகையில் கிடைக்கின்றன. பாதிப் பகுதிக் குடில்களுக்கு வாடகை ரூ. 5/- முதல் ரூ. 9/- வரையில்; முழுக் குடில்வாடகை ரூ. 10/- முதல் ரூ. 16/- வரையில். ஐந்து உறுப்பினர்கள் கொண்ட ஒரு குடும்பம் பாதிப் பகுதிக் குடிலகளிலும், 12 பேர் கொண்ட குடும்பம் முழுக் குடிலிலும் வசதியாகத் தங்கலாம்.

இததனை வசதிகளுடன் 10,000 முதல 15,000 யாத்திரிகர் வரையில் திருமலையில் தங்கமுடியும் ஆனால் அநேக சமயங்களில் கோயிலைத் தரிசிக்க வரும் பக்தர்களின் எண்ணிக்கை 25,000யும் தாண்டி விடுகிறது. கடைசி நிமிஷததில் இடம் கிடைக்காமல் திண்டாடுவதைத் தவிர்க்க, முன் கூட்டியே குடில்களுக்கு ரிஸர்வ் செய்து கொண்டுவிடுமாறு யாத்திரிகரை வேண்டுகிறோம். வரவேற்பு அதிகாரி, திருமலை-திருப்பதி தேவஸ்தானம், திருமலை (போன்: 2571) என்ற விலாசத்துக்கு ஒரு வாரம் முன்பே எழுதி ரிஸர்வ் செய்து கொள்ளவேண்டும். தங்கும் வசதி கோரி எழுதும் எல்லா விண்ணப்பங்களுடனும் ரூ. 20/-க்கு டிமாண்ட் டிராபடோ, மணியார்டரோ சேர்த்து அனுப்ப வேண்டும். கிடைக்கக் கூடிய தங்குமிடங்களை ரிஸர்வ் செய்து தரப்படும்; அதிகப்படி கட்டணம் திருப்பித் தரப்படும்

டிமாண்ட் டிராப்டோ, மணியார்டரோ திருமலைக்குக் கிடைததவுடன், விண்ணப்பித்தவர்களுக்கு ரிஸர்வேஷன்கார்டு ஒன்று அனுப்பப்படும. தங்குமிடங்களைப் பெற அந்த ரிஸர்வேஷன் கார்டையோ, மணியார்டர் அல்லது டிமாண்ட் டிராப்ட் ரசீதுகளையோ திருமலை விசாரணைக் காரியாலயததில் காட்ட வேண்டும்.

பொதுவாக ரிஸர்வேஷன் ஒரு நாளைக்கு மட்டுமே வழங்கப்படும். மேலும் நீடிக்க வேண்டுமானால் தங்குமிடங்கள் கிடைப்பதை அனுசரிததே கொடுக்கப்படும்; உறுதி கூறமுடியாது.

யாத்திரிகர் தங்கள் உடைமைகளை ஜாக்கிரதையாக வைததுச் செல்லத் திருமலையிலும் திருப்பதியிலும தேவஸ்தான 'காப்பு அறை' வசதிகள் உள்ளன. யாத்திரிகர் சமையல செய்ய விரும்பினால தேவையான பாத்திரங்களைத் தேவஸ்தானத்திலிருந்து குறைந்த டிபாஸிட் கட்டிப் பெறலாம். யாததிரிகர் ரூ. 30/- டிபாசிட் கட்டினால் காட்ரெஜ் பூட்டுகள் கொடுக்கபபடும்.

திருப்தியான தாவர உணவு வகைகளை நியாய விலையில் அளிக்கும் பலஉணவு விடுதிகளைத திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருமலையில் நடத்துகிறது.

நிர்வாக அதிகாரி,
திருமலை-திருப்பதி தேவஸ்தானம்
திருப்பதி.

# தில்லையில் நந்தனாரும் குலசேகரரும்

டாக்டர், G. T. கோபாலகிருஷ்ண நாயுடு,

அத்தியாயம்—1

## அறுபத்து மூவரும் பன்னிருவரும்

தென்னாடுடைய சிவனே போற்றி என்பது மூதுரை. இத்தென்னாட்டில் தமிழ் பக்தமணிகள் 'நாயன்மார்' எனவும் 'ஆழ்வார்' எனவும் போற்றப்பட்டவர். நாயன்மார் சைவ சமயத்தவர்; ஆழ்வார் வைணவத்தில் ஆழ்ந்தவர். நாயன்மார் என்ற சொல்லுக்குத் தலைவர் எனப் பொருள்; ஆழ்வார் என்பவரும் தலைவர் எனக் குறிக்கப்படுவர். மற்றும் இறைவனுடைய அழகிய நற்குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுவோர் ஆழ்வார் எனக் கூறப்படுவர்.

### அன்பின் வெற்றி :

நாயன்மார் அறுபத்து மூவர்: ஆழ்வார் பன்னிருவர். நாயன்மார்களும் ஆழ்வார்களும் பல்வேறு சாதிகளில் பல்வேறு இடங்களில் தோன்றியவர்கள்; எனினும் பக்தியிலேயே இவர்கள் உள்ளம் ஒன்றுபட்டிருந்தது. 'அன்பே சிவம்' என நாயன்மார்களும் 'அன்பில் அன்றி ஆழியானை காண வல்லீரே? ' என்று ஆழ்வார்களும் கூறினர். எல்லாவிதத் தொண்டுகளுக்கும் பக்தி வழிகளுக்கும், அன்பே பிரதானம் என்பது அறுபத்து மூவருடைய வாழ்க்கைத் தொடரில் காண்கிறோம். சங்ககாலத்திற்குப் பிறகு தமிழ் நாட்டை உய்விக்கவந்த பெரியோர்கள் ஆழ்வார்களும் நாயன்மார்களும். இத்தெய்வப் புலவர்கள் அருளை வளர்த்த பெருமக்கள். அவர்கள் காலத்தில் திருக்கோயில்கள் விளக்கம் பெற்றன. நாயன்மார்கள் அருளிய பாடல்கள் தேவாரம்; ஆழ்வார்கள் இயற்றிய பாடல்கள் திவ்யப் பிரபந்தம்.

இனிப் பின்வரும் அத்தியாயங்களில், அறுபத்து மூவருள் ஒருவரான நந்தனாரும், பன்னிருவருள் ஒருவரான குலசேகராழ்வாரும் அன்பெனும் அணிகலனைக் கொண்டு. ஞானானந்தப் பேரொளிகண்டு, பேரின்ப முற்றார்கள் என்பதையும், அவர்கள் எப்படி மற்ற மக்களும் வாழ வழி வகுத்தனர் என்பதையும் ஆராயுவோம்.

### நந்தனார் :

நந்தனார் காலம் பல்லவப் பேரரசின் இரண்டாம் பகுதி எனக் கருதலாம். பல்லவ அரசின் இடைக்காலமும் இறுதிக்காலமும் சைவ வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்தன. எட்டாம் நூற்றாண்டிலும் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த பல்லவ அரசர்கள் வைணவ சமயத்தை ஆதரித்தவர்களாயினும் சிவன் கோயில்களில் திருப்பணிகளைச் செய்து திருப்தி அடைந்தனர்.

### பிறப்பு :

இத்தகைய பக்தியுகத்தின் உச்சநிலையில் சோழநாட்டிலே கொள்ளிட நதியின் அருகாமையில் ஆதனூர் என்னும் சிற்றூரின் புலைப்பாடியில் நந்தனார் தோன்றினார். இவர் புரட்டாசி ரோகினி நட்சத்திரத்தில் பிறந்தவர். அவ்வூரினில் திருநூறு பூசும் அடியவர் திருக்கூட்டம்நிறைந்திருந்தது.ஆதனூரில் செல்வர்கள் வசதியான மாளிகைகளிலும், வேறு குடிமக்கள் சிறு வீடுகளிலும் வாழ்ந்து கொண்டிருந்தனர். அவ்வூர் புறத்தே வயல்களால் சூழப்பட்ட புலைச்சேரி ஒன்று இருந்தது. இறந்த பிராணிகளின் புலால் உண்டு அவற்றின் தோல்பற்றிய தொழிலைச் செய்தவர்கள் புலையர்கள் என்று அந்நாளில் ஒதுக்கப் பெற்றிருந்தனர்.

### சிவத் தொண்டு :

ஆதனூர் புலையர்கள் உழவுத் தொழிலையும் உரிமையாகக் கொண்டவர்கள். இப்புலைப்பாடியில் பிறந்து வளர்ந்த நந்தனார் ஆதனூரில் வெட்டியான் தொழில் செய்து வந்ததுமல்லாமல், அத்தொழிலுக்காக விடப்பட்ட மானியமாகிய வயலின் விளைவினால் சீவனம் செய்து வந்தார். சேக்கிழார் வாக்கிலே,

"மெய்பரிவு சிவன் கழற்கே விளைந்த உணர்வொடும் வந்தார்"

என நந்தனாரைக் காண்கிறோம். அவருக்குச் சிவபக்தி கருவிலே திருவாக அமைந்திருந்தது. சிவபெருமானின் திருவடிக்கே உண்மையான அன்பை விளைவித்தன் பயனாக முன் உணர்ச்சியோடு இவ்வுலகில் தோன்றியவர் நந்தனார் என்பது குறிப்பு. தம்மரபிற்கு ஏற்ற முறையில் நந்தனார் தொண்டு நெறியில் நின்று ஒழுகினார். ஆதனூர் வழியாகச் சென்ற யாத்ரிகர்கள் மூலமாகவும், அவ்வூரில் வசித்த சில அடியவர்கள் மூலமாகவும் இவரது இயற்கை அன்பு சிவபக்தியாகவும் சிவத்தொண்டாகவும் மலர்ச்சி பெற்றது என்றும் கருதலாம்.

### உழைப்பு :

நந்தனார்சிவன் கோயில்கள் தோறும் சென்று பேரிகைகளுக்கு வேண்டிய போர்வைத் தோலும், கட்டுவதற்கு வேண்டிய வாரும் கொடுத்துவந்தார். வீணைக்கும் யாழுக்கும் தேவையான நரம்புகளையும் பூசைக்குத் தேவையான கோரோசனை முதலிய பொருள்களையும் கொண்டு போய்க் கொடுப்பார். தமக்குக் கோவிலில் பிரவேச உரிமை இல்லாததால் கோவிலுக்கு வெளியே நின்று அன்பின் மிகுதியால் பாடிக் கொண்டே ஆனந்தக் கூத்தாடுவார்.

# ஸ்ரீ தியாகராஜ ஸுப்ரபாதம்

திரு. M. V. ராமநாதகவிபாடிகள், திருப்பதி.

ஸ்ரீராமசந்த்ரபஜநாம்ருதகானவ்ருத்தே
ஸ்ரீஜானகீம்ருதுபதாம்புஜசித்தவ்ருத்தே ।
ஸ்ரீமத்தனூரம தனுபாலிதபக்திசித்த
ஸ்ரீத்யாகராஜஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖ 16 ‖

ஸ்ரீவேங்கடேசுவரகவித்வ வரப்ரஸாதம்
ஸ்ரீராமநாதவரபக்தகவிப்ரணீதம் ।
ஸ்ரீத்யாகராஜஸுகுரோ ரிஹ ஸுப்ரபாதம்
நித்யம் படந்து மனுஜாஸ் ஸகலார்த்தஸித்யை ‖ 17 ‖

## ஸ்தோத்ரம்

கமலாலயஜன்ம புனீததநோ கலிகல்மஷநாஸநபக்தியுத ।
கவிகர்மணி கீர்த்தநகாநகர புவி ஸர்வஜநஸ்ய ஹிதப்ரபல ‖ 18 ‖

லயதாளதுரூஹரஹஸ்யவித பஜநாம்ருதஸாரவிலீநமதே ।
பவதாபவிமோசககானகுரோ ரகுராமபதாஞ்சிதகாவ்யகர ‖ 19 ‖

ஸகலாகமஸாரக்ருதிப்ரசுர ஸ்வரராக நவீநவிதாநதுர ।
ஸரளம் தவகாவ்ய மமோகபலம், இஸதிதி ஸமஸ்தபுதைர் விதிதம் ‖ 20 ‖

அவதாரவிசேஷ இதி ப்ரதிதம் கவிதாஜநமானஸதத்வவிபும் ।
அனகம் விமலம் ஸுஜனம் ஸுகுணம் ஸததம் ஸுகுரும் தமஹம்
சரணம் ‖ 21 ‖

ஜநகாதிமஹாமதி நிச்சலதீ: பரதத்வவிசாரவதாம் ச ஸுதீ: ।
ஸ்வரராகமஹார்ணவ லப்ததநீ கரதாள ஸுதம்புருவாத்யதுநீ ‖ 22 ‖

விதிதஸ்வரஸப்தஸுநாதகுரோ கவிமானஸஹம்ஸ ஸுராஜகுரோ ।
தவராமஸநாத கவிப்ரிய ஹே முதித: ஸ்துதி மாத்ருதவான் பவ மே ‖ 23 ‖

## ப்ரபத்தி

வேதாந்த ஸாரவிஸதீக்ருத கானலோலம்
ஓங்காரநாதஸரஸீருஹப்ருங்கராஜம் ।
பக்தாக்ரகண்ய மதுலம் மஹநீயமூர்த்திம்
ஸ்ரீத்யாகராஜஸுகுணம் சரணம் ப்ரபத்யே ‖ 24 ‖

ஆஸேதுசீதநக ஸம்ஸ்துதவைபவாட்யம்
ஆந்த்ரப்ரதேசவிபுதாகிலகல்பவ்ருக்ஷம் ।
ஆத்ராவிடம் ஹி ஸுமஹத் திலகாயமானம்
ஸ்ரீத்யாகராஜஸுகுணம் சரணம் ப்ரபத்யே ‖ 25 ‖

பக்தா னனு ப்ரதிதினம்ஸ்வயமேவ கத்வா
ஸம்ஸாரதாரக மஹாமனு மேவ ஜப்த்வா ।
காருண்யபுத்திபரிதஞ்ச மஹாநுபாவம்
ஸ்ரீத்யாகராஜஸுகுணம் சரணம் ப்ரபத்யே ‖ 26 ‖

ஸம்ஸார ஸாகரஸமுத்தரணைக நாவம்
பக்திப்ரபத்தி முபதேசவதாம் ப்ரஸித்தம் ।
நாதேந ஸர்வ உபயாந்த்விதி போதயந்தம்
ஸ்ரீத்யாகராஜஸுகுணம் சரணம் ப்ரபத்யே ‖ 27 ‖

(தொடரும்)

### திருப்புன்கூர் :

ஆதனூருக்கு ஆறு மைல் தொலைவிலுள்ள திருப்புன்கூருக்குச் சென்று, அங்கே கோயில் கொண்டிருக்கும் சிவலோகநாதரைத் தொழுது தொண்டாற்ற விரும்பினர். உடன் புறப்பட்டு, திருப்புன் கூரை அடைந்து, அவ்வூர் கோவில் வாசலில் நின்று கொண்டு சிவபெருமானுடைய புகழைப் பாடினர். அக்கோவிலிலுள்ள நந்திதேவர் சந்நிதியை மறைத்துக் கொண்டிருந்ததால் இவருக்குச் சிவ தரிசனம் கிடைக்கவில்லை. 'மலைபோல் மாடு படுத்திருக்குதே' எனவும் தாம் முன்செய்த தீவினைதான் 'இப்படிக் குறிக்கிட்டுத் தரிசனத்திற்கு இடையூருக நிற்கிறதோ' எனக் கண்ணீரும் கம்பலையுமாய் அலறினர் நந்தனர். 'அழுதால் உனைப் பெறலாமே' என்ற வாக்குக் கேற்ப சிவலோக நாதர் ''சற்றே விலகி இரும்பிள்ளாய்' என்று ஓர் அன்புக் கட்டளைப் பிறப்பித்தார், நந்திதேவனுக்கு. அவ்வண்ணமே நந்திதேவரும் விலக, சிவலோக நாதனைத் தரிசித்துப் பன்முறை வணங்கினர், நந்தனர். துதித்தார், பெருமானைக் கண்ணுரக் கண்டு நெஞ்சாரப் புகழ்ந்தார். தன் ஜென்மம் சாபல்யமடைந்தது என அன்புக் கண்ணீர் வடித்தார்.

### அமைந்த குளம் :

பின்பு கோவிலிலிருந்து திரும்பிச் செல்லும் போது கோவிலின் பின், நிலம் பள்ளமாக அமைந்திருப்பதைக் கண்டு, அதைத் தன் உழைப்பால் மேலும் பள்ளமாக்கி, ஆழமும் விசாலமுமுள்ள ஓர் குளமாக்கி, அமைத்தார். கோவிலுக்கும் அடியார்களுக்கும் பொதுமக்களுக்கும் வசதியாக இக்குளம் அமைந்ததைப் பார்த்துப் பெருமிதமடைந்தார். மீண்டும் மீண்டும் இக்கோயிலைப் பன்முறை வலம் வந்து வணங்கினர். நந்திதேவர் விலகியதும் சிவலோகநாதர் தரிசனம் அருளியதும் கண்டு நந்தனர் தன் கோரிக்கை நிறைவேறியது என ஆடினர்,

பாடினர். அண்மையில் திருப்புன்கூர் கோவிலைக் கண்டோம் நாம். சிவ லோகநாதரின் முன்பு நந்திதேவர் விலகியுள்ளதைப் பார்த்து நாம் மகிழ்ந்தோம். இன்றும், என்றும் இக் காட்சியை யாவரும் காணலாம்.

சிவபெருமான் நந்தியைப் பார்த்துப் "பிள்ளாய்! நந்தன் சித்தம் குறையில் நமது செல்வம் முற்றும் குறையும்" எனக் கூறினராம். பக்தனுடைய சித்தத்தில் மகிழ்ச்சி குறையுமானல், பகவானுடைய செல்வமாகிய உலகமெலாம் வாடிப்போகுமாம். என்ன அற்புதமான இறைவனுடைய கருத்து; இதுவும் பக்தர்களுக்கு ஓர் படிப்பினை.

நாளைப்போவேன் :

நந்தனருக்கு நாளடைவில், தில்லைக்குப்போய்ஆனந்தக்கூத்தரைத்தரிசிக்க வேண்டும் என்னும் ஆசை அதிகரித்தது. தில்லையைப் பற்றி ஆதனூர் அடியவர்கள் மூலமாகவும் யாத்திரிகள் மூலமாகவும் பல உண்மைகளை அறிந்தார். தேவாரம் பாடிய மூவரும், மற்ற தொண்டர்களும் பேறு பெற்றதையும், அற்புதங்கள் நிகழ்ந்ததையும், அடியவர் பலரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார், இப்பூலோக கைலாசமாகக் கருதப்பட்ட தில்லைச் சிதம்பரத்தின் சிறப்புப்பற்றி. இரவு முழுவதும் இதே சிந்தனை. 'போவேன் நாளைக்குப் போவேன்', என எண்ணமிட்டார் ஒவ்வொரு நாளும். 'நாளைப் போவேன், நாளைப் போவேன்', என்று சொல்லிக்கொண்டே, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக, எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். அதனலே இவருக்குத் 'திரு நாளைப் போவார்' என எல்லோரும் பெயரிட்டனராம்.

இதுபோன்று பன்னிருவர் ஒருவரில் குலசேகராழ்வாரும் தலைநகரலிருந்தே திருவரங்கம் போகவேண்டும், போக வேண்டும் என்று பல சமயங்களில் எண்ணமிட்டாராம். அரங்கம் செல்லும் வாய்ப்பு அரசராகிய இவருக்கு எத்தனையோ ராச்சியக் கவலைகளுக் கிடையே கிடைக்கவில்லை. குலசேகராழ்வாரும், நநதனரும் 'நாளைப் போவேன், நாளைப் போவேன்' என்று எண்ணமிட்டுக் கொண்டும், சொல்லிக் கொண்டும், இருந்தும், பிரயத்தனம் கைகூடவில்லை. இவ்வாறு நாளை நாளை என்று பல நாட்கள் கழிந்தன. மனம் நிம்மதியில்லை; பொறுக்கவும் இயலவில்லை. எப்படியேனும் தில்லைக்குச் செல்லவேண்டுமெனத் தீர்மானித்துப் புறப்பட்டுத் தில்லையின் எல்லையை அடைந்தார்.

(தொடரும்)



## வா! வா! வெங்கடேசா!

திரு கவிஞர் சக்திதாசன், திருச்சி-5.

அறிவினுக் கப்பால் நிற்கும்
அரங்கனே! வெங்க டேசா!
உறிதயிர் உண்ட வாயா!
உத்தமா! வெங்க டேசா!
நெறியுமாய் நீதி யாகும்
நெடியவா வெங்க டேசா!
குறியுமாய் குணமு மாகும்
குருபரா! வெங்க டேசா!

திருப்பதி மலையில் வாழும்
திருமாலே! வெங்க டேசா!
கருமுகில் நிறத்தில் மின்னும்
கதிரவா! வெங்க டேசா!
கருதுவோர் தெய்வ மாகும்
கண்ணியா! வெங்க டேசா!
சுருதியின் நாத மாகும்
சுகந்தனே! வெங்க டேசா!

பவளவாய் கமலக் கண்ணு!
பாண்டுரங்கனே! வெங்க டேசா!
நவநிதி நல்கும் நேயா!
நாரணு! வெங்க டேசா!
அவலமே துடைக்கும் மாலே!
அச்சுதா! வெங்க டேசா!
எவருமே ஏத்த வல்ல!
ஏந்தலே! வெங்க டேசா!

விழிகளில் அன்பு காட்டும்
விமலனே! வெங்க டேசா!
மொழிகளில் மிகுந்து பூக்கும்
மறையவா! வெங்க டேசா!
பழிவரா காத்து வாழ்வில்
பாலொளி வீச என்றும்
வழித்துணை யாக வா! வா!
வரதனே! வெங்க டேசா!



## சந்தாதாரர்களுக்கு...

30-11-78 ஆம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும்:

T

*334, 364, 683, 780, 871, 888, 890, 905, 915, 1077, 1432, 1438, 1439, 1442, 1446, 1451, 1452, 1453, 1457, 1464, 1468, 1471, 1473, 1478, 1481, 1483, 1490, 1492, 1493, 1494, 1496, 1510, 2197, 2199 முதல் 2203 வரை, 2205 முதல் 2217 வரை, 2219 முதல் 2246 வரை.*




திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்)கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்)பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 455 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 220 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்துளை | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

# செய்திச் சுருக்கம்

## ஸ்ரீ வைகானஸாசார்யார்

ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் அருளினை நேரடியாகப்பெற்று, அவ் இறைவனால் வைணவக் கோயில்களின் அர்ச்சகர்களின்ஆசார்யராக நியமிக்கப்பெற்றவர் என்ற காரணத்தால் ஸ்ரீ வைகானஸர் அவ் அர்ச்சகர்களால் கடவுளர் நிலையில் வைத்துப் போற்றப்படுகின்றார். மற்றவர்களுக்கு அவர்களுடைய சமய ஆசாரியர்கள் மனித உருவில் இருக்க வைகானஸ அர்ச்சகர்களுக்கு மட்டும் தெய்வ நிலையில் உள்ள வைகானஸரே ஆசாரியராக விளங்குவது ஒரு சிறப்பு அம்சமாகும். ஸ்ரீ வைகானஸாசார்யாருக்குத்திருப்பதி ஸ்ரீகோதண்டராம சுவாமி கோயில் தேருக்கு எதிரில் கோயில் ஒன்று உள்ளது. இக்கோயில் 1933 ஆண்டுஅமைக்கப்பட்டது. அது முதற்கொண்டு உள்ளூர் அர்ச்சகர்கள் ஒவ்வொரு ஆண்டும் ஸ்ரீ வைகானஸாசார்யாருக்கு பிரம்மோற்சவம் நடத்தி வருகின்றனர் (ஆஷாட சுக்ல பௌர்ணமி ஸ்ரவண நட்சத்திரம்) இவ்வகையில் மேற்படி உற்சவம் திருப்பதியில் 11–7–78 முதல் 22–7–78 வரை வெகு விமரிசையாக நடைபெற்றது.

## ஸ்ரீ தியாகராஜரின் 35-வது ஆராதனை விழா

திருப்பதி ஸ்ரீ தியாகராஜா விழாக் குழுவின் சார்பில் திருப்பதியில் ஸ்ரீ தியாகராஜ மண்டபத்தில் சத்குரு ஸ்ரீ தியாகராஜசுவாமிகளின் 35-வது ஆராதனை விழா 23-8-78 முதல் 28-8-78 வரை 6 நாட்கள் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

23-8-78 அன்று மாலை, சென்னை மியூசிக் அகாடமியின் செயலாளர் டாக்டர். வி. ராகவன் அவர்கள் இவ் விழாவை துவக்கி வைத்தார். துவக்க விழா நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து பம்பாய் சகோதரிகளான திருமதி. சி. சரோஜா மற்றும் திருமதி. சி. லலிதா குழுவினரின் இன்னிசைக் கச்சேரி ஒன்று நடைபெற்றது. அடுத்த நாள் மாலை 7 மணி அளவில், மறைந்த சங்கீத கலாநிதி ஸப்தகிரி சங்கீத வித்வன்மணி திரு, வித்யால நரசிம்மலு நாயுடு அவர்கள் திருவுருவப் படத்தினை, அவருடைய சிஷ்யர்களில் ஒருவரான சங்கீத கலாநிதி திருமதி. டி. கே. பட்டம்மாள் அவர்கள் திறந்து வைத்தார். பின்னர் தம்முரையில், திரு. நரசிம்மலு நாயுடு அவர்களின் கர்நாடக இசைப்புலமையையும், அவருடன் தாம் கொண்டிருந்த ஈடுபாட்டினையும் விளக்கிக் கூறினார். அன்று மாலை 7-30 மணி அளவில் திருமதி. டி. கே. பட்டம்மாள் குழுவினரின் இன்னிசைக்கச்சேரி ஒன்றும், அதனைத் தொடர்ந்து மதுரை திரு. டி. என். சேஷகோபாலன் குழுவினரின் இன்னிசைக் கச்சேரி ஒன்றும் நடைபெற்றன.

மூன்றாம் நாளான 25-8-78 அன்று மாலை 6 மணிக்கு திரு. நூகல சின்ன சத்யநாராயணா குழுவினரின் இன்னிசைக் கச்சேரியும், அதனைத் தொடர்ந்து கலைமாமணி திருமதி. வி. குஞ்சுமணி மற்றும் திருமதி. என். நீலா குழுவினரின் குழலிசைக் கச்சேரியும் நடைபெற்றன. அடுத்த நாளான 26-8-78 அன்று திருப்பதி ஸ்ரீ தியாகராஜசுவாமியின் கோயில் மற்றும் கட்டடக் குழுவின் முன்னாள் தலைவரான மறைந்த திரு. பி. ராதாபதி அவர்கள் திருவுருவப் படத்தினை ஆந்திர மாநில கூட்டுறவுத்துறை அமைச்சர் திரு. என். அமர்நாத் ரெட்டி அவர்கள் திறந்துவைத்து உரையாற்றினார். அன்று மாலை 8 மணி அளவில் சென்னை நர்த்தனசாலையின் சார்பில், மறைந்த நாட்டிய கலாநிதி பந்தநல்லூர் திரு. மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களிடம் கடைசியாக பயிற்சிபெற்ற குமாரி. ஜி. லக்ஷ்மி ராஜம் குழுவினரால் பரதநாட்டியம் மற்றும் அபிநயன நிகழ்ச்சியும் நடைபெற்றன.

ஸ்ரீ வைகானஸாசார்யார்-திருப்பதி. திரு. ஏ. கே. ராமாநுஜம்-திருப்பதி.



ஐந்தாம் நாளான 27-8-78 அன்று மாலை, இவ்விழா ஒட்டிய மலர் ஒன்றினை, முன்னாள் சென்னை ஷெரிபும் சென்னை இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையின் செயற்குழு தலைவருமான திரு. ஆர். ராமகிருஷ்ணன் அவர்கள் வெளியிட்டார். இவ்விழாவிற்குத் தலைமை தாங்கிய தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. ஆனந்தராவ் முதலியார் அவர்கள், இச்சிறப்பு விழாவின்போது பிரபல வீணை வித்வானும், புது தில்லி ஆல் இந்தியா ரேடியோவின் இன்னிசைக் முழுவின் இயக்குனருமான திரு. ஈமணி சங்கர சாஸ்திரி அவர்களுக்கு, ஸ்ரீ தியாகராஜ விழாக்குழுவின் சார்பில் 'ஸப்தகிரி சங்கீத வித்வன்மணி' எனும் சிறப்புப் பட்டம் வழங்கினர். அன்று மாலை 8 மணிக்கு திரு. ஈமணி சங்கர சாஸ்திரி அவர்களின் வீணைக் கச்சேரி நடைபெற்றது.

விழாவின் இறுதி நாளான 28-8-78 அன்று மாலை குமாரி. கே.ஆர். லக்ஷ்மி குழுவினரின் நாட்டிய நிகழ்ச்சியும், திருமதி. எம். ஆர். குருலக்ஷ்மி, ராதா கிருஷ்ணமூர்த்தி குழுவினரின் இன்னிசைக் கச்சேரியும், காரைக்குடி திருமதி. ஜெயமணி, நரசிம்மம் குழுவினரின் இன்னிசைக் கச்சேரியும், குமாரி. டி. உஷா குழுவினரின் கோட்டுவாத்தியக் கச்சேரியும், திருமதி. ஏ. இந்திராணி குழுவினரின் இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றன.

## புதிய கொடி மரம்

காஸ்யப மகரிஷி இந்திரனைக் காக்கும் நிமித்தம் கடுந்தவம் புரிந்த திருத்தலம்மென்றும், கலியபெருமாள் வாமனனைக் காட்சிதந்து திருவிளையாடல் புரிந்தருளிய திருத்தலமென்றும் விளங்கும் சென்னை ஆவடி அடுத்து உள்ள திருவிளஞ்சியம்பாக்கத்தினை, தன்னுடைய இரண்டாம் படைவீடாகக் கொண்டு பக்தர்களுக்கு அருள்புரிகின்றாள் ஸ்ரீ தேவி கருமாரி அம்மன். கலியுக தெய்வமென விளங்கும் ஸ்ரீ கருமாரி அம்மன் கோயில் கொண்டிருக்கும் இத்திருத்தலத்தில் புதிய கொடிமரம் (துவஜஸ்தம்பம்) ஒன்று 2-10-78 அன்று அமைக்கப்பட உள்ளது. ஆகவே இத்தருணத்தினை பக்தர்கள் ஓர் அரிய வாய்ப்பாகக் கொண்டு இந்நிகழ்ச்சியில் பங்கேற்று அன்னையின் அருளுனைப் பெறுவார்களாகுக.

(தகவல்: திரு டி. வி. நாகன்-சென்னை.)

★

---

(24-ம் பக்கத் தொடர்ச்சி)

அன்று இரவு இறைவன் கோயிலுக்குத் திரும்புவதற்குள் பொழுது புலர்ந்துவிடும். விரைவான சமயச் சடங்குகளுக்குப் பிறகு, அன்றுகாலை (ஆறுவது நாள்) இறைவன் சிறிய திருவடியில் அதாவது ஹனுமந்த வாகனத்தில் எழுந்தருளுவார். தலைவனையே தன் இறைவனுகக் கொண்டு, காலம் முழுவதும் தொண்டு ஒன்றினையே கடமையாகக் கொண்டு ராமாவதாரத்தில் பக்திக்கு ஓர் இலக்கணமாக விளங்கிய அனுமனின் சேவையினையும், ஆற்றலையும் நினைவு கூறும் வகையில் அனுமன் வாகனம் விளங்குகிறது. அன்று மதியம் இறைவன் தன் இரு தேவியருடன் மேற்கு மாடவீதியில் உள்ள வசந்த மண்டபத்திற்கு எழுந்தருளுவார். அங்கு அவருக்கு மணமிக்க நீரினுல் திருமஞ்சனம் அல்லது அபிஷேகம் நடைபெறும். இதுவே வசந்தோற்சவமாகும். மாலை கோயிலுக்குத் திரும்பியபின், அன்று இரவு இறைவன் யானை வாகனத்தை அலங்கரிப்பார்.

அடுத்த நாளான ஏழாவது நாள் அன்று, சூரிய சந்திர மண்டலங்களில் இறைவன் தங்கியிருப்பதாகக் கூறப்படுவதால், அதன் அடையாளமாக அன்று காலையிலும் இரவிலும் முறையே சூரிய, சந்திரப்பிரபைகளில் அவர் திருவீதி வலம் வருவார். ஒளிகளுக்கெல்லாம் ஒளியாக விளங்கும் அவ்விறைவனின் சுட்ரொளியினின்றுதான் சூரியனும் சந்திரனும் ஒளிப்பெற்று தங்கள் கடமையைச் செய்கின்றனர் என்பதைக் கூறுகின்றன சூரியப்பிரபை, சந்திரப்பிரபை வாகனங்கள். திருமலையிலுள்ள சூர்யப்பிரபை வாகனம் தென்னிந்தியாவிலேயே மிகப் பெரியது என்று கூறப்படுகிறது. ஒளிர்விடும் வஜ்ர கவசத்துடன், தலையில் பெரிய விலையுயர்ந்த கல் பதித்த கொண்டை அணிந்த இறைவனின் திருவுருவம் காண்போர் மனதை வெகுவாகக் கவரும்.

எட்டாம் நாளன்று இறைவன் தன் தேவியாருடன் குறிப்பிட்ட நன் முகூர்த்தத்தில் வேதங்கள் முழங்க, மங்கள வாத்தியம் ஒலிக்க நன்கு தூய்மையாக்கப்பட்டக்கோயிலைச்சுற்றிய அகன்ற மாடவீதிகளில் தேரானது பக்தர்களால் இழுக்கப்பட்டு, குறித்த நேரத்தில் தேடியைச் சேரும். அன்று மாலை வரை இறைவன் தேரில் வீற்றிருந்து பக்தர்களுக்குக் காட்சி வழங்குவார். ஜாதிமத பேதமின்றி, எல்லோரும் ஓர் குலம் என்னும் ஒருமைப் பாட்டுணர்வினை மக்கள் உணர்ந்து செயற்பட வேண்டும் என்பதைத்தான் தேரில் இறைவன் பவனி வரும் காட்சி கூறுகிறது. அன்று இரவு இறைவன் குதிரை என்ற ஹஸ்வ வாகனத்தில் எழுந்தருளுவார்.

ஒன்பதாவது நாள் அவப்ருத உற்சவம் (தீர்த்த வாரி) நடைபெறும். இதுதான் கடைசி நிகழ்ச்சி. உபய நாச்சிமார்களுடன் ஊர்வலமாக ஸ்வாமி புஷ்கரணியின் அருகில் உள்ள ஆதிவராஹ ஸ்வாமி ஸன்னதியை அன்று மதியம் அடைவார். பிரம்மோற்சவம் மிகச் சிறப்புடன் நடைபெற்றதைக் குறிப்பிடும் வகையில் அன்று இறைவனின் சுதர்ஸனம் குறிப்பிட்ட நன்முகூர்த்தத்தின்போது புஷ்கரணியில் இறக்கப்படும். இதுபோது யாத்திரிகர்களும் புஷ்கரணியில் மூழ்கி எழுந்தால் அவர்களுடைய பாவங்கள் கரையும் என்று நம்பப்படுகிறது. இந்நிகழ்ச்சியை தீர்த்தவாரி திருமஞ்சனம் எனவும் கூறுவர். இப்பத்து நாள் பிரம்மோற்சவத்தின் போது, இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் ஆதரவில் புராண சங்கீர்த்தனங்களும், இன்னிசைக் கச்சேரிகளும் திருமலையில் மிகச் சிறப்பாக நடைபெறும்.

உற்சவங்கள் எல்லாவற்றிலும் பிரம்மோற்சவம் அதி முக்கியமாகவும், ஈடு இணையற்றதாகவும் கருதப்படுகிறது. ஏனெனில் எத்த உற்சவத்திலும் அவ்வளவு மக்கள் ஒரே சமயத்தில் கூடி பகவானின் அருளைப் பெறுவதையும், இவ்வளவு விசேஷங்களை ஒரே சமயத்தில் கண்டு களிப்பதையும் காண முடியாது. ஐஹிக சுகங்களுக்கு ஆளாகி, மமகார அசூயைகளுடன் நிறைந்த நம் உள்ளத்தைப் பெருமானின் தரிசன குணகீர்த்தனங்களால் சுத்தப்படுத்தி நல்வழிக்குத் திருப்பி மறுபிறவி இல்லாமல் செய்வதே இவ்வித உற்சவங்களின் குறிக்கோள். நம்மிடம் உள்ள ஜோதி நம்மைப் பிரிந்திருந்தாலும், க்ஷணிக சுகத்திலிருந்து நம்மை விடுவித்து மக்களுக்கு நிலையான ஆனந்தத்தை விளைவிக்கும் எம்பெருமானுகிய ஜோதி என்றும் மாறுத தாகும்; அணையாததும் ஆகும்.

★

# ராசிபலன் (1-10-78 முதல் 31-10-78 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.



## மேஷம்:

*[அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய]*

ராகுவினுல் பணவரவு; சனியினுல் பொருள் நஷ்டம், பிள்ளைகள் அல்லது புதல்விகளிடமிருந்து பிரிவு அல்லது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல்; குருவினுல் உறவினர்களின்மூலம் கருத்துவேறுபாடுகளுக்குள்ளாதல். மாதத்தின் முதல் 23 நாட்கள் வரை செவ்வாயினுல் மனைவியுடன் கருத்து வேறுபாடு அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதிப் படல், இறுதி 8 நாட்களின் போது பண நஷ்டம், மதிப்புக்குறைதல் அல்லது உடலில் அடிபடுதல்; சுக்ரனுல் பெண்களின் மூலம் தொல்லைகள் ஏற்படல்; புதனுல் மாதத்தின் முதல் 17 நாட்களின் போது வெற்றி ஆனுல் இறுதி நாட்களுக்கு கருத்து வேறுபாடுகளை ஏற்படுத்துதல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது வெற்றியும் உடல் நலமேன்மையும் ஆனுல் இறுதி 15 நாட்களின் போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப் படல்.



## ரிஷபம்:

*[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]*

ராகுவினுல் மனயமைதி இழத்தல்; சனியினுல் பொருள் நஷ்டம் அல்லது மனைவி அல்லது பிள்ளைகளிடமிருந்து பிரிவு; குருவினுல் ஏமாற்றங்களுக்குள்ளாதல்; மாதத்தின் முதல் 23 நாட்களின் போது செவ்வாயினுல் பணவரவு. வெற்றி ஆனுல் மாத இறுதியில் மனைவியுடன் கருத்து வேறுபாடு கொள்ளுதல் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதியுறல்; சுக்ரனுல் உடல்நலக் குறைவு அல்லது அவமானப் படல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் பாதிக்கப் படல் அல்லது எதிரிகளால் தொல்லைகள், இறுதி 15 நாட்களின் போது உடல் நலமேன்மையும், வெற்றியும்: மாதத்தின் முதல் 17 நாட்களின் போது புதனுல் மனைவியுடன் அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள் கொள்ளுதல் ஆனுல் இறுதியில் வெற்றியும், மகிழ்ச்சியும் கிடைக்கப் பெறல்.



## மிதுனம்:

*[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் முடிய].*

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பணவரவு, உடல் நலமேன்மை, புதிய வீட்டுச் சாமான்கள் வாங்குதல், புதிய வாகன வாய்ப்பு; குருவினுல் பணவரவு, வெற்றி; சுக்ரனுல் பணவரவு, பெரியோர்களால் புகழப்படல், புதிய உறவுகள்; சூரியனுல் எதிரிகளின்மூலம் துன்பங்கள் ஏற்படல் அல்லது உடல்நலம் கெடல்; செவ்வாயினுல் மாதத்தின் முதல் 24 நாட்களின் போது உடல்நலம் கெடல் அல்லது எதிரிகளால் அல்லது தன் மக்களால் கவலைக்குள்ளாதல் ஆனுல் இறுதியில் பணவரவு, மகிழ்ச்சி, உடல் நலமேன்மை; புதனுல் மாதத்தின் முதல் 17 நாட்களின் போது பண வரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி ஆனுல் இறுதியில் மனைவி அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள்.



## கடகம்:

*[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]*

ராகுவினுல் பணவரவு ஆனுல் சனியினுல் அதிக செலவினங்களும், மனயமைதி பறி போதலும்; குருவினுல் பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல், கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல்; சுக்ரனுல் புதிய நண்பர்கள், மாதத்தின் முதல் 17 நாட்களின்போது புதிய நட்புறவுகள் கிடைப்பினும், தான் மேற்கொண்ட தீய நடவடிக்கைகளினுல் பயப்படுதல் ஆனுல் இறுதியில் பண வரவும், குடும்பத்தில் மகிழ்ச்சியும் ஏற்படல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பணவரவு அல்லது மதிப்புயர்தல் ஆனுல் இறுதியில் உடல் நலம் பாதிக்கப்படல்; மாதத்தின் முதல் 24 நாட்களின் போது செவ்வாயினுல் உடல் நலம் கெடல் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது கூடா நட்புறவினுல் கவலைகளுக்குள்ளாதல் இறுதியில் உடல் நலக்குறைவு அல்லது எதிரிகளால் கவலைக்குள்ளாதல்.



## சிம்மம்:

*[மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய].*

ராகுவினுல் பண நஷ்டம்; சனியினுல் கவலைகள் அல்லது உற்ருர் உறவினருடன் பிரிவு அல்லது பிரயாணமும் உடல்நலம் கெடலும்; குருவினுலும் பிரயாணமும் உடல் நலம் கெடலும்; சுக்ரனுல் பண வரவு, வெற்றி, மதிப்புயர்தல் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப் பெறல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பண நஷ்டம், ஏமாற்றப்படல், கண் சம்பந்தப்பட்ட வியாதிகளினுல் அவதியுறல் ஆனுல் இறுதி 15 நாட்களின் போது பண வரவு, மதிப்புயர்தல்; புதனுல் பண வரவு இருப்பினும் மாதத்தின் முதல் 17 நாட்களின் போது இகழ்ச்சிக்குள்ளாதல், இறுதியில் புதிய நண்பர்கள் கிடைக்கப்பெறல்; செவ்வாயினுல் மாதத்தின் முதல் 24 நாட்களின் போது தவருன வழியில் பொருள் கிடைக்கப் பெறல், இறுதியில் வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதியுறல் அல்லது தீய நட்புறவினுல் கெடுதிகள் ஏற்படல்.



## கன்னி:

*[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].*

ராகுவினுலும், சனியினுலும் மனயமைதி இழத்தல்; குருவினுல் பணவரவும், மதிப்புயர்தலும்; சுக்ரனுல் பணவரவு, தானிய வகைகள் கிடைக்கப் பெறல், மதிப்புயர்தல் அல்லது மக்கட் பேறு; சனியினுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பண நஷ்டம், அல்லது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல்

அவதியுறல், இறுதி 15 நாட்களின் போது ஏமாற்றப்படல், பணநஷ்டம்; செவ்வாயினால் மாதத்தின் முதல் 24 நாட்களின் போது கருத்து வேறுபாடுகள் அல்லது அலுவலகக் கவலைகள் அல்லது உடல் நலம் கெடல் அல்லது வீட்டில் திருடு போதல்; புதனால் மாதத்தின் முதல் 17 நாட்களின் போது கருத்து வேறுபாடுகள், தவறான அறிவுரைகளைக் கேட்ட தன் விளைவாக பண நஷ்டம் ஆனால் இறுதியில் இகழ்ச்சிக்குள்ளானாலும் பண வரவு.



**துலா :**

*[சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய]*

ராகுவினால் பண நஷ்டம்; சனியினால் பண வரவு, மகிழ்ச்சி; குருவினால் பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல்; சுக்ரனால் குடும்பத்தில் மகிழ்ச்சி; சூரியனால் ஏமாற்றங்கள் அல்லது பண நஷ்டம் அல்லது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல்; செவ்வாயினால் மாதத்தின் முதல் 24 நாட்களின் போது கவலைகள், இறுதியில் கருத்து வேறுபாடுகள் அல்லது அலுவலகக் கவலைகள் அல்லது உடல் நலம் கெடல் அல்லது வீட்டில் திருடு போதல்; புதனால் மாதத்தின் முதல் 17 நாட்களின் போது இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல் அல்லது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல், இறுதியில் கருத்து வேறுபாடுகளினால் பண நஷ்டம் அல்லது தவறான யோசனைகளை ஏற்றல்.



**விருச்சிகம் :**

*[விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய]*

ராகுவினால் குடும்பத்தில் மகிழ்ச்சி; சனியினால் பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல்; குருவினால் பண வரவு, வெற்றி, தானிய வகைகள் கிடைக்கப் பெறல் அல்லது மக்கட் பேறு; சுக்ரனால் கெடுதிகள் ஏற்படல்; மாதத்தின் முதல் 15 நாட்களின் போது சூரியனால் மதிப்புயர்தல், வெற்றி, பண வரவு, உடல் நலமேன்மை ஆனால் இறுதி 15 நாட்களின் போது ஏமாற்றங்களுக்குள்ளாதல்; மாதத்தின் முதல் 24 நாட்களின் போது செவ்வாயினால் பண நஷ்டம், மனைவிக்கு மனயமைதியின்மை, கவலைகளுக்குள்ளாதல், ஆனால் இறுதியில் சுமாரான நற்பலன்கள் கிடைக்கப் பெறல்; புதனால் மாதத்தின் முதல் 17 நாட்களின் போது பண வரவு, புதிய நண்பர்கள், வாகன வாய்ப்பு, இறுதியில் கருத்து வேறுபாடுகள், இகழ்ச்சிக்குள்ளாதல், உடல் நலம் பாதிக்கப்படல்.



**தனுசு :**

*[மூலம், பூராடம், **உத்திராடம் முதல்** பாதம் முடிய].*

ராகுவினால் கருத்து வேறுபாடுகள்; சனியினால் கருத்து வேறுபாடுகள், மேலும் உடல் நலம் பாதிக்கப்படல், கூடா ஒழுக்கம் கொளல்; குருவினால் உடல் நலம் பாதிக்கப்படல், கவலைகள், பிரயாணம்; சுக்ரனால் பணவரவு, நல்ல நண்பர்கள், புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப் பெறல், குடும்பத்தில் மகிழ்ச்சி; சூரியனால் வெற்றி, மதிப்புயர்தல், பண வரவு, உடல்நல மேன்மை; மாதத்தின் முதல் 24 நாட்களின் போது செவ்வாயினால் வெற்றி, இறுதியில் பண நஷ்டம், உடல் நலம் கெடல் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல் அல்லது மனைவிக்கு மனயமைதியின்மை; புதனால் பண வரவு, வெற்றி, நல்ல நண்பர்கள் அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட் பேறு.



**மகரம் :**

*[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய].*

ராகுவினால் தீய நடவடிக்கைகளில் பங்கேற்றல், சனியினால் உற்றார் உறவினருடன் பிரிவு; குருவினால் பண வரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி; சுக்ரனால் கருத்து வேறுபாடுகள், இகழ்ச்சிக்குள்ளாதல்; மாதத்தின் முதல் 15 நாட்களின் போது சூரியனால் பண நஷ்டம், உடல் நலம் பாதிக்கப்படல், ஆனால் இறுதி 15 நாட்களின்போது வெற்றி, மதிப்புயர்தல்; செவ்வாயினால் மாதத்தின் முதல் 24 நாட்களின் போது பணவரவு, இறுதி நாட்களில் வெற்றி; மாதத்தின் முதல் 17 நாட்களின் போது புதனால் ஏமாற்றங்கள் ஆனால் இறுதியில் வெற்றி, பண வரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி.



**கும்பம் :**

*[அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய]*

ராகுவினால் கவலைகள்; சனியினால் பிரயாணம்; குருவினால் மூளைச்சோர்வு ஏற்படல்; சுக்ரனால் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள்; மாதத்தின் முதல் 15 நாட்களின் போது சூரியனால் உடல் நலக்குறைவு, மனைவிக்கு மனயமைதியின்மை இறுதி 15 நாட்களின்போது பண நஷ்டம், ஏமாற்றங்கள்; மாதத்தின் முதல் 24 நாட்களின் போது செவ்வாயினால் பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல் இறுதியில் பல் வேறு காரணங்கள் முன்னிட்டு பண வரவு; புதனால் மாதத்தின் முதல் 17 நாட்களின் போது வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள், பண வரவு ஆனால் இறுதி 14 நாட்களின் போது ஏமாற்றங்கள்.



**மீனம் :**

*[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய].*

ராகுவினால் கருத்து வேறுபாடுகள்; சனியினால் உடல்நல மேன்மையும், வெற்றியும்; குருவினால் வாகன வாய்ப்பு அல்லது மக்கட் பேறு, புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப்பெறல், பணவரவு; சுக்ரனால் புதிய வீடு வாங்குதற்குரிய வாய்ப்பு, அல்லது புதியன வாங்குதல்; சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணம், வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல், இறுதி 15 நாட்களின் போது உடல்நலம் பாதிக்கப்படல் அல்லது மனைவிக்கு மனயமைதியின்மை; செவ்வாயினால் பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல்; மாதத்தின் முதல் 17 நாட்களின்போது புதனால் தீவிரமான கருத்து வேறுபாடுகள் ஆனால் இறுதி 14 நாட்களின் போது வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப் பெறல், பண வரவு.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501

# ஸ்ரீ வெங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரி பூஜைகள். தர்மதர்சனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | முதல் | 3-30 | வரை | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 4-15 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 4-15 | ,, | 4-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 4-30 | ,, | 5-00 | ,, | முதல் அர்ச்சனை (ஏகாந்தம்) |
| 5-00 | ,, | 5-30 | . | முதல் மணி, சாத்துமுறை |
| 5-30 | ,, | 1-00 | மதியம் | ஸர்வ தரிசனம் |
| 1-00 | ,, | 1-30 | ,, | 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 1-30 | ,, | 7-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | இரவு கைங்கர்யம், |
| 8-30 | ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-30 | | | | ஏகாந்த சேவை (ஏகாந்தம்) |

### புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஏகாந்தம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 10-00 | ,, | சஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் |
| 10-00 | ,, | 1-00 | மதியம் | சஹஸ்ர கலசாபிஷேகம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | இரவு | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி முதலியவைகள் |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவைகள் |
| | | 11-30 | | ஏகாந்த சேவை (ஏகாந்தம்) |

### வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | . | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 7-00 | , | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 11-00 | ,, | சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா அலங்காரம், மணி, திருப்பாவாடா கிரஹஸ்தர்களுக்கு பஹுமானம் முதலியவை |
| 11-00 | ,, | 7-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | இரவு | சுத்தி முதலியவை |
| 7-30 | ,, | 9-00 | ,, | பூலங்கி சமர்ப்பணம் இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9 00 | ,, | 11-30 | ,, | பூலங்கி (ஆர்ஜிதம்) |
| 11-30 | ,, | 11-45 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-45 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

### வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,. | 5-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-00 | ,, | 7-00 | ,, | சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 9-00 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 9-00 | ,, | 11-00 | ,, | அபிஷேகானந்தார தரிசனம் (ஆர்ஜிதம்) |
| 11-00 | ,, | 12-30 | மதியம் | சமர்ப்பணம் |
| 12-30 | ,, | 2-00 | மாலை | தோமால சேவை அர்ச்சனை மணி, பலி, சாத்துமுறை |
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யங்கள் இரவு மணி |
| 9-00 | ., | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-30 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

குறிப்பு : விழா நாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சி நிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.